# *Tiruppukaḻamirtam*
# *Malar 18, itaḻ 6*
# *September 1953*

Record no. 166

# திருப்புகழமிர்தம்


மலர் 18 | விஜய புரட்டாசி | இதழ் 6




"பரிவா லுளத்தில் முருகா எனச்சொல்
பகர்வாழ் வெனக்கும் அருள்வாயே"


வருட சந்தா | உள்நாடு ரூ. 2-0-0

ஆசிரியர்: கிருபானந்தவாரி

சிந்தாதிரிப்பேட்டை .......சென்னை

மதுரைத் திருப்புகழ் சபையில்
**5-8-53** முதல் 15-8-53 முடிய நடைபெற்ற கந்தரநுபூதி விழாவில்
மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீன இளவரசு **திருவருள் தவயோக**
**சோமசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்**
**திருமுருக கிருபானந்தவாரி** அவர்களுக்கு
**'அருள்மொழி அரசு'**
என்ற சிறப்புப் பெயர் (பட்டம்) அருளியபோது வாசித்தளித்த

## பாராட்டுரை

சீரார் மதுரைத் திருஞான சம்பந்த தேசிகன்றன்
பேரார் பரம்பரை பீடு பெறவந்து பீடுதங்தோ
ஞரார் திருவுளந் திகழ்சோம சுந்தர நற்குரவன்
பாரார் மதித்திடுஞ் செஞ்சொற், பணிபுரி பண்புணர்ந்தே.
வள்ளி மணாளனை வண்டமிழ்ச் செல்வத்தை வாழ்வுதரும்
பிள்ளையை யுள்ளத்திற் சொல்லிலின் மெய்யினிற் பேணிநிற்கும்
வள்ளன்மை யான்கிரு பானந்த வாரிக்கு வையகத்தா
ருள்ளி வழங்குஞ் சிறப்பினைத் தும்மோ ருருப்படைந்தே.
முன்பிருந்த தோவென்ன முன்னவருண் **மொழியரசென்**
றன்புடனே யிவ்வுலக மழைக்கவெனப் பெயர்வழங்கு
மன்பெருமை யினோகினைந்து மகிழ்சிறந்து வளர்கின்றோ
மின்புறுகின் றேஞ்சைவ வெழிலுணர்வு மிகவறிந்தே.

—**பாலகவி.**

திருநெறித் தமிழ்வளர் அருள்மொழிக் குரவன்
பரம்பரை வந்த சிறந்தநற் றலைவன்
சிவத்திரு சோம சுந்தரத் தவக்கதிர்
ஞானமும் பீடும் நண்ணினர்க் கருளி
ஊனம் போக்க ஒளிர்சிவ மாமணி
சார்ந்தவர் பெருமை தேர்ந்தே யறிந்து
ஓர்ந்தவர் தமக்கு உறுசிறப் பருளும்
தன்மையாளன் உன்னியே ஆய்ந்து
நூலறிவினர் தொழும் வாலறி விறைவன்
நற்றுள் சாரும் பொற்புடை நெறியை
கற்றநற் புலவரும் கல்லா நிலையரும்
தெற்றென உணரச் செய்யு நற்புலவோன்,
கிருபானந்தப் பெருஞ் சொல் வாரியை
அருள்மொழி யாற்புவி யிருள் ஒழித்திடுநல்
**அருள்மொழி யரசென்** றறிந்தே யிந்த
சிறப்புப்பெயர் நனி சிறப்பமை பெயரே
வழங்குதற் குரியார் வழங்குதல் சிறப்பே
பெறுதற் குரியரும் பெற்றனர் பேறே
அன்பர் பெற்ற இன்புறு சிறப்பை
யாம்பெறு சிறப்பென இறும்பூ தெய்தினம்
சிறப்பை யருளிய செம்மலும்
சிறப்பைப் பெற்ற செல்வரும் வாழியே.

—சிவக்கிபூார் **திருநாவுக்கரசனுர்.**





ஓம் குஹாயநம:

# திருப்புகழமிர்தம்

**"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் முன்போற்றுந்**
**திருப்புகழைக் கேளீர் தினம்"**

மலர் 18 | விஜய ஆண்டு புரட்டாசித் திங்கள் செப்டம்பர்-1953 | இதழ் 6

## திருப்புகழ்

### பொது

அகல நீளம் யாதாலு மொருவ ராலு மாராய
அரிய மோன மேகோயி லெனமேவி-
அசைய வேகரி யாபீட மிசைபு காம காஞான
அறிவி னுத ராமோத மலர் தூவிச்;
சகல வேத ஞதீத சகலவாச காதீத
சகல மாகரி யாதீத சிவருப-
சகல சாத காதீத சகல வாச ஞதீத
தனுவை நாடி மாபூசை புரிவேனே;
விகட தார சூதான நிகள பாத போதுள
விரக ராக போதார சுரர்கால-
விபுத மாலி காநீல முகப டாக மாயூர
விமல வ்யாப காசில கவிநோத;
ககன கூட பாடீர தவள சோபி தாளான
கவனபூத ராரூட சதகோடி-
களப காம வீர்வீசு கரமு கார வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

18-21

## பதவுரை

விகட தார - வேடிக்கையைத் தரித்த, சூது ஆன - வஞ்சனையாகிய, நிகளபாத போ தூள - பந்தத்தில் பதிதலைப் போகுமாறு தூள் படுத்து பவரே! விரகராகபோது ஆர் அசுரர் கால - காம நோயுடன் கூடிய மோகத்திலேயே பொழுதுபோக்குபவர்களாகிய அசுரர்களை அழித் தவரே! விபுத மாலிகா - தேவதருவின் மலர் மாலையைத் தரித்தவரே! நீல முக பட அக மாயூர - நீல நிறமுடையதும் முகபடத்தையுடையது மாகிய மயிலை வாகனமாகவுடையவரே! விமல - மலமில்லாதவரே! வ்யாபகா - எங்கும் நிறைந்தவரே! சீலக விநோத - நல்லொழுக்கத்தில் பொழுது போக்குபவரே! ககன கூட - விண்ணுலகில் வாழ்வதும், பாடீரம் - சந்தனப் பொட்டு அணிந்ததும், தவள சோபித - வெண்மை நிறத்துடன் அழகியதும், ஆள் ஆன-அடிமைபோல் ஏவல் செய்வதும், கவன - வேகமாகச் செல்வதுமாகிய, பூதர ஆரூட - மலை போன்ற ஐராவத யானைமீது ஏறிவரும், சதகோடி - வஜ்ராயுதபாணியாகிய இந்திரன்; களப காமவீர் - கலந்து அன்பு செய்கின்ற வீரரே! கரம் வீசு முக - ஒளிவீசுகின்ற திருமுகத்தை யுடையவரே! ஆர வேல் வீர - பூமாலையை யுடைய வேலாயுதத்தை ஏந்திய வீரமூர்த்தியே! கருணை மேருவே - கருணையில் மேரு மலைபோல் உயர்ந்தவரே! தேவர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமையின் மிக்கவரே! அகலம் நீளம் யாதாலும் ஒருவராலும் ஆராய அரிய - இவ்வளவு அகலம் இவ்வளவு நீளம் என்று யாராலும் அளந்து ஆராய்ந்து அறிய முடியாததாகிய, மோனமே கோயில் எனமேவி அசைய - மௌன மாகிய திருக்கோயிலை யடைந்து இருந்து, க்ரியா பீட மிசை புகா - கிரியையாகிய பீடத்தின்மீது அமர்ந்து, மகா ஞான அறிவின் ஆதர ஆமோத மலர்தூவி - பெரிய மெய்யுணர்வாகிய ஞான மலரை அன்பு டனும் மிகுந்த மகிழ்ச்சியுடனும் அர்ச்சித்து, சகல வேதன அதீத - எல்லா அறிவுகட்கும் அப்பாற்பட்டதும், சகல வாசக அதீத - எல்லாச் சொற்களுக்கும் அப்பாற்பட்டதும், சகல மாக்ரியா அதீத - எல்லா வகையான பெரிய கிரியைகளையுங் கடந்ததும், சிவரூப சகல சாதக அதீத - நன்மை வடிவான எல்லாப் பிரமாணங் (அளவை) கட்கும் அப்பாற்பட்டதும், சகல வாசன அதீத - எல்லா மணங்கட்கும் மேலானதும் ஆகிய, தனுவை நாடி - புருவ நடுவில் விற்பிறைபோல் விளங்கும் குறியைக் குறியாது குறித்து நின்று, மா பூசை புரிவேனோ - பெரிய வழிபாட்டை அடியேன் புரியமாட்டேனோ? (புரிதல் வேண்டும்).

## பொழிப்புரை

வேடிக்கையுடன் கூடிய வஞ்சனையால் பந்திக்குந் தன்மை யாகிய மலமாயா கன்மங்களைத் தூளாக்குபவரே! காமவேட்கை யுடன் கூடிய மோகத்தில் பொழுது போக்கும் அசுரர்களை அழிப்பவரே! தெய்வ மலர்மாலை தரித்தவரே! முகபடத்துடன் கூடிய நீல மயிலை வாகனமாக வுடையவரே! மலமில்லாதவரே! எங்கும் நிறைந்தவரே! நல்லொழுக்கத்தில் பொழுது போக்கு பவரே! விண்ணுலகத்தில் வாழ்வதும் சந்தன திலகம் அணி வதும் அழகிய வெண்மை நிறமுடையதும் அடிமைபோல் பணி செய்வதும் வேகமாகச் செல்வதும் மலை போன்றதுமாகிய ஐரா வத யானைமீது ஏறிவரும் வஜ்ராயுதபாணியாகிய இந்திரன் கலந்து அன்பு செய்கின்ற வீரரே! ஒளி வீசுகின்ற முகத்தினரே! மாலைபூண்ட வேலைத் தரித்த வீரமூர்த்தியே! கருணையில் மேரு மலைபோல் உயர்ந்தவரே! தேவர் போற்றும் பெருமிதமுடைய வரே! இத்துணை அகலம் இத்துணை நீளம் என்று யாராலும் அளந்தும் ஆராய்ந்தும் அறியமுடியாத "மௌனம்" என்ற திருக்கோயிலை யடைந்து இருந்து, கிரியையாகிய ஆதனத்தின் மீது அமர்ந்து, பெரிய மெய்யுணர்வாகிய ஞான மலரை அன்புட னும் மிக்க மகிழ்ச்சியுடனும் அர்ச்சித்து, எல்லாவித அறிவையும் கடந்ததும், எல்லாவிதச் சொற்களையுங் கடந்ததும், எல்லா விதத் தொழிலையுங் கடந்ததும், நன்மை வடிவாகிய எல்லா விதப் பயிற்சிகளையுங் கடந்ததும், எல்லாவித மணங்களையுங் கடந்ததுமாய, புருவ நடுவில் வில் வடிவம்போல் உள்ள குறி யைக் குறியாது குறித்து நின்று சிறந்த ஞான பூசை செய்து உய்ய அருள்புரிவீர்.



## விரிவுரை

### அகல நீளம் யாதாலும் ஒருவராலும் ஆராய அரியமோனமே கோயில்:—

அறிவு வடிவாக விளங்கும் இறைவனை மோனம் என்ற கோயிலில் கண்டு வழிபடவேண்டும். ஞானத்தின் எல்லையாகத் திகழ்வது மோனம் என வுணர்க. "மோன மென்பது ஞான வரம்பு" என்று உபதேசிக்கின்றார் ஔவையார்.

மன சம்பந்தம் அற்ற இடத்திற்கு மௌனம் என்று பேர். வாய் பேசாததற்கு மௌனம் என்று கூறுவது ஒரு அளவுக் குப் பொருந்தும். அதற்கு வாய்மௌனம் எனப்படும். கை கால் அசைக்காமல் வாய் பேசாமல் இருப்பதற்குக் காஷ்ட மௌனம் என்று பேர். மனமே அற்ற நிலைக்குத்தான் பூரண மௌனம் என்று பேர். அங்கேதான் பூரண இன்ப ஊற்று உண்டாகும். அந்த இன்ப வெள்ளத்தில் திளைத்தார் இந்திர போக இன்பத்தை வேப்பங்காயாக எண்ணுவர்.

இந்த மௌனத்தையருளுமாறு ஒரு திருப்புகழில் அருண கிரியார் ஆறுமுகக் கடவுளை வேண்டுகின்றார்.

"சலில லியன சனனமு மலமலம்
இனியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமும் அருள்வாயே"
—திருப்புகழ்.

அந்த மோனமாகிய கோயிலின் அகல நீளத்தை எவரா லும் எதனுலும் ஆராய்ந்து அறிய முடியாது. அதை ஞான குரு வுணர்த்த உணர்வினுலேயே உணரமுடியும். அதனைப் பெற்ற தாயுமானப் பெருந்தகையார் கூறுகின்ற அமுத வசனங்களை இங்கு உன்னுக.

அறிந்த அறிவெல்லாம் அறிவன்றியில்லை
மறிந்த மனம் அற்ற மவுனம்—செறிந்திடவே
நாட்டினுன் ஆனந்த நாட்டில் குடிவாழ்க்கை
கூட்டினுன் மோன குரு.

எல்லாமே மோனநிறை வெய்துதலால் எவ்விடத்தும்
நல்லார்கள் மோனநிலை நாடினுர்—பொல்லாத
நானெனஇங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோன குருவே.

மோன குருவளித்த மோனமே யானந்தம்
ஞானம் அருளுமது நானுமது—வானுதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
என்றறிந்தேன் ஆனந்த மே.

ஆனந்த மோனகுரு வாமெனவே என்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதால்—தேனுந்து
சொல்லெல்லாம் மோனம் தொழிலாதி மோனம்
எல்லாம் நல் மோனவடிவே.

## கிரியாபீடம்:—

இங்கே மோனமாகிய கோயிலில் கிரியையாகிய பீடத்தில் இருத்தல். கிரியை என்பது இங்கே ஞானத்திற் சரியை ஞானத்தில் கிரியை ஞானத்தில் யோகம் ஞானத்தில் ஞானம் என்ற நான்கு பாதங்களில் ஞானத்தில் கிரியையைக் குறிக்கும் என வுணர்க.

மோனமாகிய கோயிலில் புறக்கிரியைகட்கு இடம் இல்லை.

"சரியை யாளர்க்குமக் கிரியையாளர்க்கு நற்
சகலயோகர்க்கு மெட் டரிதாய"

என்று கதிர்காமத் திருப்புகழில் அடிகளார் கூறியிருப்பதை யும் இங்கு உய்த்துணர்க.



## மகாஞான அறிவு ஆதராமோத மலர்:—

மோனக்கோயிலில் ஞானப்பூவினுல் அர்ச்சிக்கவேண்டும். அந்த ஞானம் மகாஞானமாகும். பாசஞான பசுஞானமன்று. அது அன்பையும் இன்பையும் அங்கமாகக் கொண்டது. அறிவின் பயன் அன்பு; அன்பின் சிகரம் இன்பம் எனத்தெளிக.

மோனமாகிய கோயிலில் ஞானக்கிரியையாகிய பீடமேல் இருந்து, அறிவேவடிவாகிய ஆண்டவனுக்கு மெய்யுணர்வாகிய மென்மலரிட்டு வழிபடும் இவ் வழிபாடு ஞான பூஜையாகும்.

நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.
—தாயுமானுர்.

## சகலவேதனுதீத:—

வேதனம்—அறிவு.

அறிவு அறிகின்றவகையால் பலதிறப்படும். கடலைப்பற்றி யறிகின்ற அறிவு; மண்ணைப்பற்றி அறிகின்ற அறிவு; விண் ணைப்பற்றி அறிகின்ற அறிவு; நீரைப்பற்றி யறிகின்ற அறிவு; தீயைப்பற்றி யறிகின்ற அறிவு; நோயைப்பற்றி அறிகின்ற அறிவு; உயிரைப்பற்றி அறிகின்ற அறிவு. இந்த அறிவுகள் எல்லாவற்றுக்கும் அப்பாலுள்ள அறிவு அருளறிவு என வுணர்க. அந்த அருளறிவை யன்றி ஏனைய அறிவுகளை எல்லாங் கடந்த இடத்தில் ஞான பூசை நிகழும்.

## சகல வாசகாதீத:—

வாசகம்—சொல்.

"மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே" என்ற மணி வாசகத்தின்படி சொற்களையெல்லாம் கடந்தது அது. சொல்லே அற்ற இடத்தில் தண்டபூப நியாயப்படி பொருள் தானே அற்றுவிடும். "சும்மா இரு சொல்லற என்றலுமே அம்மா பொருளொன்றும் அறிந்திலனே" என்பது அநுபூதி. "சொல்லாலும் பொருளாலும் அளவையாலும் தொடர வொண்ணு அருள் நெறி" என்பார் தாயுமானுர். இங்கே வாசகமாகக் கூறும் மந்திரங்களையும் கடந்து நிற்கும் பூசையாம் என்பதும் அறிக. அஜபா நலத்துடன் கூடியது அது.

## சகல மாக்ரியா தீத:—

முன் கூறியபடி ஞானபூஜை எல்லாவகைப்பட்ட கிரியை களையுங் கடந்தது. இதனுல் கிரியாபூஜை தாழ்ந்தது என்பது பொருளன்று. அது ஜீவபோதம் உள்ளவரை செய்யத் தக்க தாகும். தூங்கியவன் கைப்பொருள் தானே நழுவுமாபோல்

மெய்யுணர்வு எய்தி தான் அதுவாய் நிற்குந் தனிப்பெரு நிலையில் கிரியைகள் தாமே கழன்றுவிடும்.

**சகல சாத காதீத:—**

சாதகம்—பயிற்சி.

ஞானத்தைப் பெறுவதற்காக மேற்கொள்ளும் பயிற்சிகள் பலவுள. ஞானநிலை எய்தியபோது பயிற்சிகள் விலகும். ஏணிமேல் ஏறி மாடிமீது சேர்ந்தோன் ஏணியை விட்டுவிடுவது போல் என அறிக. அதைக் கண்டு பாதி ஏணிமேல் நிற்போன் ஏணியை உதறித் தள்ளுவானுயின் தலைமண்டை உடைந்து போகும். ஆகவே அநுபவத்தில் தானே வரக்கூடிய நிலையை வலிந்துகொண்டு, அநுபவம் வராமுன் கொண்ட பயிற்சிகளை விடக்கூடாது.

**சகல வாசனதீத:—**

முன் பற்றியிருந்த பொருள்களில் உள்ள பற்றுக்களின் வாசனை. பெருங்காயம் எடுத்தபின்னும் அதன் வாசனை அந்தப் பெட்டியில் வருவதுபோல் வாசனையாக வந்து சில பற்றுக்கள் ஆன்மாவைத் தாக்கும். ஆகவே வாசனைகளையும் கடந்து சென்று நிற்கவேண்டும்.

**தனுவை நாடி மாபூசை புரிவேனே:—**

தனு—வில்.

புருவ நடுவே வில்போன்ற ஒரு குறியுண்டு. ⌣ நிலாப்பிறை போன்ற அதன் நடுவே 'ய' என்ற எழுத்து விளங்கும். அக்குறியைக் குறியாது குறித்து நின்று அசைவற்று கருவி கரணங் கழன்று சித்திர விளக்குபோல் நிற்கவேண்டும்.

"எட்டி ரண்டு மறியாத என் செவியில்
எட்டி ரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டி ரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே"

இலிங்கம்—குறி. எட்டும் இரண்டும் பத்து. அது ய. இந்த "ய" ஆக்ஞா என்ற புருவ நடுவில் இருக்கின்றது. அதில் நாட்டத்தை வைத்தார்க்கு வாட்டமில்லை.

நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்ட மில்லை மணக்கும் அழிவில்லை
ஓட்ட மில்லை உணர்வில்லை தானில்லை
தேட்ட மில்லைச் சிவனவ னுமே.

என்கின்றார் திருமூலர்.



புருவ நடுவே ஞானத்தின் ஊற்று இருப்பதனலேயே அங்கு பொட்டு இட்டு அடையாளஞ் செய்கின்ற வழக்கம் நம் நாட்டில் தொன்றுதொட்டு வருகின்றது.

**விகடதார சூதான நிகளபாத போதுள:—**

நிகளம்—சங்கிலி. இங்கே ஆன்மாவைக் கட்டும் பந்தத்தைக் குறித்து நின்றது.

"விகடத்தைத் தரித்த வஞ்சனையால் வரும் பந்தத்தைப் போகும்படி தாள் செய்பவனே!" என்று முருகனை விளிக்கின்றார். 'போக' என்பது ஈறு கெட்டு 'போ' என வந்தது.

**விரகராக போதார சுரர் கால:—**

விரகம்—காம நோய்; ராகம்—மோகம்.

போது—பொழுது; ஆர்—நிறைதல். காம நோயைத் தரும் மோகத்திலேயே பொழுதைப் போக்கும் அசுரர்கட்கு அழிவைப் புரிபவர் முருகப்பெருமான். "நிருதரார்க்கொரு காலா" என்றும் பிறிதொரு திருப்புகழில் கூறுகின்றார்.

**விபுத மாலிகா:—**

விபுதர்-தேவர். தேவர்கள் தெய்வ தருக்களில் பூக்கும் மலர்களை எடுத்துத் தொடுத்து முருகனுக்கு மாலை சூட்டுவர். அம்மலர் மாலை மாறுத மணம் நிறைந்தது; வாடாதது.

**நீலமுகபடாக மாயூர:—**

முகபடம்—யானைக்கு முகத்தில் அணியும் அழகிய துணி. மயிலுக்கும் அதுபோல் அதன் முகத்தில் அழகிய படம் விளங்குவதாகக் கூறுகின்றனர்.

**ககனகூடம்:—** விண்ணுலகம்.

**பாடீரம்:—** சந்தனம். யானைக்கு சந்தன திலகம் அணிவது மரபு.

**சோபிதம்:—** அழகு.

**ஆனை:—** இந்திரனுக்கு ஒரு அடிமைபோல் ஐராவதமென்ற யானை பணிபுரியும்.

**கவனம்:—** வேகமாகச் செல்லக் கூடியது.

**பூதரம்:—** மலை. இங்கு உவமஆகுபெயராக யானையைக் குறிக்கின்றது.

**சதகோடி:—** வஜ்ராயுதம்.

**களபம்:—** கலத்தல்.

**சாப:—** பிரியம்.

பொன்னுலகத்தில் உறைவதும் சந்தனதிலகம் அணிந்திருப்பதும், வெண்மைநிற முடையதும், அழகியதும், பணி செய்வதும், வேகமுடையதும், மலைபோன்றதுமாகிய ஐராவதத்தின் மேல் வரும் வஜ்ராயுதபாணி மனங் கலந்து விரும்புகின்ற தெய்வம் முருகவேள்.

**வீசுகரமுக:—**

கரம்—ஒளி. ஒளிவீசுகின்ற திருமுகத்தையுடையவர்.

**கருணைமேருவே:—**

முருகப் பெருமான் கருணையில் மேருமலைக்கு நிகரானவர். கருணைத் தெய்வம்.

## கருத்துரை

**அசுரகுலகாலரே! மயில்வாகனரே! இந்திரன் போற்றும் கருணைமேருவே! மோனமாகிய கோயிலில் ஞானமாகிய மலர்தூவி, புருவ நடுவில் நாட்டத்தைச் செலுத்தி ஞானபூசை செய்யத் திருவருள் புரிவீர்.**

---

## ஸௌராஷ்ட்ர நீதிஸம்பு

*106.* வேசிகளைப் பார்த்தாலே சித்தம் கலங்கிவிடுகின்றது. அவர்களைக் கவனித்தால் பணம் போய்விடுகின்றது. அவர்களுடன் கூடினால் உடம்பில் வியாதி பரவுகின்றது. ஆகையால் வேசிகளைப் பிரத்தியட்ச ராட்சசிகள் என பாவிக்க வேண்டும்.

*107.* அத்திப் பூவையும் பார்த்துவிடலாம். வெள்ளை காக்கையையும், மீன் காலையும் பார்த்துவிடலாம். ஆனால் ஒரு கல் மனதைக் கரைக்க முடியாது. ஒரு ஸ்திரீயின் உள்ளத்தின் ஆழத்தை அறிய முடியாது.

*108.* நாலு பேர்களின் அபிப்பிராயம் (நியாயமின்றி இருப்பினும்) நியாயமானதுதான் என்று யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஒரு தனி நபரின் அபிப்பிராயம் (நியாயத்துடன் இருப்பினும்) சாரமற்றது என தள்ளப்படுகிறது. இதை அறிந்து எவ்வார்த்தையும் பேசாத மௌனியை எப்பொழுதும் "தர்மராஜா" என்று போற்றுவார்கள்.

உ
திருச்சிற்றம்பலம்

# பெரிய புராணம்

## சேரமான் பெருமாள் நாயனர் புராணம்

(கஉசம் பக்கத் தொடர்ச்சி)

**சிலம்பொலி கேட்டல்:**

சேரமான்பெருமாள் நாயனர் தமது நாடு முழுவதும் சிவநெறியைப் பரப்பினர். எல்லாவுயிர்களும் கூறும் சொற்களையறிந்து அவைகளுக்கு உறும் துயரத்தை யகற்றி, களவு கொலை புலை சூது வாது முதலிய குற்றங்களில் ஜனங்கள் சேரா வண்ணந் தடுத்து அரசுபுரிந்தார். சோழவேந்தனுடனும் பாண்டிய மன்னனுடனும் நட்புரிமையுடன் கலந்து வாழ்ந்தார்.

> அளவில் பெருமை அகிலயோ னிகளும் கழறிற் றறிந்தவற்றின்
> உளமன் னியமெய் யுறுதுயர்கள் ஒன்றும் ஒழியா வகையகற்றிக்
> களவு கொலைகள் முதலான கடிந்து கழறிற் றறிவார்தாம்
> வளவர் பெருமா னுடன்செழியர் மகிழுங் கலப்பில் வைகுநாள்.

நாள்தோறும் சிவபூசையின் முடிவில் அம்பலவாணருடைய திருவடிச் சிலம்போசை கேட்டு மகிழ்வார். ஒருநாள் சிவபூசையின் முடிவில் சிலம்போசை கேட்கவில்லை. அதனால் பெருந்துயரமுற்ருர். "அம்பலவாணு! அருட்பெருங் கடலே! தேவரீருடைய திருவடிச் சிலம்போசை வழக்கம்போல் இன்று கேட்டிலேன். நாயினேன் என்ன பிழை செய்தேனே? ஒன்றும் உணர்கிலேன். இனி இந்த உடம்பு இருந்து என்ன பயன்? ஆளும் நாயகனே! கேளும் இனியும் இருந்து என்ன பயன்? மாளுவேன்" என்று துணிந்து இறைவனைப் பணிந்து, உடைவாளை யுருவி மார்பில் நாட்ட முயன்ருர். "கணீர்" என்று திருச்சிலம்போசை கேட்டது. முன்னை நாள்களினும் அதிகமாக ஒலித்த சிலம்போசையைக் கேட்டு உள்ளம் உவந்தார். வாளை எறிந்தார். கர மலர்களை சிரமேற் கூப்பித் தொழுதார். அழுதார். மண்மிசை வீழ்ந்து பணிந்தார். எழுந்தார். "ஐயனே! அருட்கடலே! சிலம்பொலி முன் கேளாதொழிந்த காரணம் யாதோ?" என்று இறைவனைக் கேட்டார்.

"சேரனே! தில்லையம்பதியில் பொன்னம்பலத்தில் நாம் அநவரத ஆனந்தத் தாண்டவம் புரியும்போது, நாமே தடுத்தாட் கொண்ட சுந்தரன் அங்கு வந்து நம்மை வழிபட்டு செந்தமிழ்ப் பதிகம் பாடினன். அப்பாடலின் சுவையில் ஈடுபட்டு நாம் இருந்தபடியால், உன் பூசை முடிவில் சிலம்பொலியைத் தரச் சற்று தாமதித்தது; வருந்தற்க" என்று அசரீரியாக இறைவர் கூறியருளினர். சுந்தரரை இவருக்கு அறிவிக்கும்பொருட்டே இவ்வாறு இசைத்தருளினர்.

இதனைக் கேட்ட சேரர்பெருமான், "ஆ! ஆ! என்னே இறைவரது கருணை! இத்தகைய பெருமைமிகுந்த சுந்தரரைக் காணுமலும் அவரைப்போற்றுமலும் அடியேன் இருக்கலாமோ? தில்லையம்பதி சென்று பொன்னம்பலவாணரைப் போற்றி செய்து, வன்றெண்டரையும் வணங்கி வருவேன்" என்று எண்ணினர். அமைச்சர்களுக்குத் தமது எண்ணத்தை யறிவித்து புறப்பாட்டுக்குரிய ஆயத்தங்களைச் செய்யச் சொன்னர். நாளுங் கோளும் நன்னிலையுள்ளபோது பொன்னிநாட்டை நோக்கிப் புறப்பட்டார். திருவஞ்சைக்களஞ் சென்று சிவபெருமானைத் தொழுது விடை பெற்றுக்கொண்டு உயர்ந்த யானைமீது ஏறிச் செல்கின்றுர். தீரமுள்ள வீரர்கள் புடைசூழ்ந்துச் சென்றுர்கள். பூமி நெளிய நால்வகைப் படைகளும் உடன் சென்றன.

சேரநாட்டையும், எங்கும் வளமிகுந்த கொங்குநாட்டையுங் கடந்து, மலையுங் காடும் நதியுங் கடந்து சோழநாட்டை யடைந்தார். வற்ருக் கருணையுடைய நற்றுய் போன்ற காவிரிநதியைக் கண்டு, அன்புடன் அதில் நீராடினர். அதைக் கடந்து வடகரை சென்று வழியில் உள்ள திருத்தலங்களையெல்லாம் வணங்கிச் சென்றுர். ஆங்காங்கு அடியவர்களுடன் வரவேற்று உபசரித்தார்கள்.

### தில்லையை யடைதல்

தில்லையம்பதியின் எல்லையை யடைந்து, அந்த எல்லையைத் தொழுதார். அவரை எதிர்கொள்ளும் பொருட்டு தில்லைவாழ் அந்தணர்களும் திருத்தொண்டர்களும் வந்தார்கள். அவர்களை வணங்கி, கோபுரத்தையுந் தொழுது, கண்ணீர் சொரிந்து திருக்கோயிலை வலம் வந்தார். அம்பலத்திற்கு முன் சென்று புலன்கள் ஒரு வழிப்பட எடுத்த திருவடியைக் கண்டு காதலாகிக் கசிந்து பன்முறை பணிந்தார். துதிசெய்தார். இறைவருடைய திருச் சிலம்போசையைக் கேட்டு உள்ளம் உவந்தார். பன்னுள் தில்லையிலிருந்து காலந்தோறுங் கனகசபை சென்று அம்பலவாணரை வழிபட்டு இன்புற்றுர்.

### திருவாரூர் வந்து சுந்தரர் சந்திப்பு

நாவலூர்ப் பெருந்தகையாகிய நம்பியாரூரரை வணங்கி மகிழ எண்ணி, திருவாரூரை நோக்கிப் புறப்பட்டார். ஆடலரசைப் போற்றி அறிவின் எல்லையாகிய தில்லையின் எல்லையை இறைஞ்சிப் போகின்றுர். வழியில் ஞானசம்பந்தர் திருவவதாரஞ் செய்த சீகாழியை யடைந்து தோணியப்பரைத் தொழுதார். இடையில் உள்ள திருத்தலங்களையெல்லாம் வணங்கிக் கொண்டு காவிரி நதியைக் கடந்து திருவாரூரையடைந்தார்.



அந்த வேளையில் சுந்தரர் நாகைக்காரோணம் போய் இறைவரைப் பாடி பொன்னும் மணியும் ஆடையும் கஸ்தூரியும் குதிரையும் பெற்று திருவாரூரை யடைந்திருந்தார். சேரர் பெருமான் வரவைக் கேட்டு அன்புடன் எதிர்கொண்டார். எதிர்கொண்டு அழைக்கவந்த சுந்தரருடைய செந்திருவடிமீது வணங்கினர் சேரர்பெருமானர். சுந்தரரும் எதிர் வணங்கி அவரை எடுத்துத் தழுவிக்கொண்டர். அன்பு வெள்ளத்தில் முழுகிக் கரையேறமாட்டாராகித் தத்தளித்தார்கள். உயிரும் உடம்பும் ஒன்றுபட்டார்கள். அவர்களுடைய தோழமையின் மேன்மையைக் கண்ட அடியார்கள் **"சேரமான் தோழர்"** என்று நம்பியாரூரருக்கு நாமஞ்சூட்டினர்கள். ஒருவருக்கொருவர் தேன் போன்ற தித்திக்கின்ற இன்னுரை கூறி மகிழ்ந்தார்கள். சேரர் கோமானை யழைத்துக்கொண்டு சுந்தரர் தியாகேசருடைய திருக்கோயில் சென்றுர். சேரமான்பெருமாள் நாயனர் திருவாரூர் மும்மணிக்கோவை பாடியருளினர்.

தோழருடன் சுந்தரர் பரவையாருடைய திருமடத்திற்கு எழுந்தருளினர். நிறைகுடமும் தூபதீபமும் அமைத்து, மலர் மாலைகளைத் தொங்கவிட்டு, எதிர்கொண்டு பரவையார் இருவருக்கும் மனமுவந்து பூசனை புரிந்தனர். தம்பிரான் தோழர் பரவையாரை நோக்கி சேரர் வேந்தருக்கு விருந்தமைக்குமாறு பணித்தருளினர். பரவையிற் பிறந்த திருவனைய பரவையார் அரசர்க்கு அமைக்கும் சிறப்புக்கு மேற்பட்ட முறையில் அடியார்க்கு விருந்து அமைத்தார். அறுசுவைக் கறிகளும் நால்வகை யுண்டிகளும் ஆயத்தஞ் செய்தார். ஒன்றுக அமர்ந்து அமுது செய்ய கழறிற்றறிவார் அஞ்சினர். ஆரூரர் அவரது திருக்கரத்தைப் பற்றி அழைத்து தம் அருகில் இருத்தினர். இருவர்களும் பரவையார் படைக்கும் அமுதினும் இனிய உணவினை யுண்டார்கள். பஞ்சவாசத்துடன் தாம்பூலம் தரித்துக் கொண்டார்கள்.

இவ்வாறு ஒருமனமுடைய இருவர்களும் சில நாள் திருவாரூரில் இருந்து மனமகிழ்ந்தார்கள். வன்றெண்டர் பாண்டிநாடு சென்று மதுரை முதலிய திருத்தலங்களை வணங்குதற்கு எண்ணினர். சேரர் பெருமானும் அன்று தனக்குத் திருமுகம் அனுப்பிய ஆலவாயண்ணலை ஆரூரருடன் சென்று வணங்குதற்கு இணங்கி அவருடன் புறப்பட்டார். அரசருடன் சேனைகளும் சென்றன. கீழ்வேளூர், நாகை, முதலிய தலங்களைச் சேவித்துக்கொண்டு திருமறைக்காட்டை யடைந்தார்கள். அங்கு அரசும் சிவக்கன்றும் வேதங்கள் பூசித்து அடைத்த திருக்கதவைத் திறந்து அடைத்த திறத்தை நினைந்து இறைஞ்சினர்கள். சேரமான் பெருமான் ஒரு அந்தாதி பாடியருளினர். மறைக்காடு மன்னிய மணிகண்டப் பெருமானைப் பன்முறை தொழுது, அங்கிருந்து புறப்பட்டு,

அகத்தியான் பள்ளி, கோடிக்குழகர், திருப்பத்தூர் முதலிய தலங்களை வணங்கி, முகில் தவழும் மணிமாடங்கள் நிறைந்த மதுரையம்பதியை யடைந்தார்கள்.

மதுரையை யாளுகின்ற பாண்டிய மன்னன் நகரை அலங் கரித்து எதிர்கொண்டு வணங்கி வரவேற்ருர். பாண்டிய னுடைய புதல்வியை மணந்து மதுரைக்கு வந்திருந்த சோழ ராஜரும் உடன் சென்று உபசரித்தார். இப்படி மூவேந்தர் களும் ஒன்றுபட்டு நம்பியாரூரருடன் சொக்கலிங்கப் பெருமா னுடைய திருக்கோயிலுள் சென்ருர்கள். சேரமான் பெருமாள் நாயஞர் திருக்கோயிலை வலம் வந்து "என்னையும் ஒரு பொரு ளாகக் கொண்டு திருமுகங் கொடுத்தருளிய பெருங்கருணை யுடைய அண்ணலே! அங்கயற்கணம்மையுடன் கூடிய அந்தி வண்ணரே! உமது கருணையின் பெருமையை என்னென்று துதிப்பேன்? தேவதேவரே" என்று துதித்து கண்ணீர் பொழிந்து வழிபட்டார். பாண்டியன் கொடுத்த தனிமாளிகை யில் நம்பியாரூரருடன் தங்கினர். சோழனும் பாண்டியனும் நன்கு உபசரிக்க மனங்கலந்து மகிழ்ந்தார். காலங்கள்தோறும் ஆலவாயண்ணலை வணங்கி, இன்பக் கடலில் முழுகினர். திருப்பூவணம், திருவேடகம், திரு ஆப்பனூர் திருப்பரங்குன் றம் முதலிய திருப்பதிகள் சென்று சிவபெருமானை வணங்கி ஞர். சுந்தரரும் வளவனும் செழியனும் உடன் சென்று மகிழ்ந்தார்கள்.

பின்னர் பாண்டியனையும் சோழனையும் நிற்குமாறு கூறி, வன்ருெண்டருடன் சேரர்கோன் புறப்பட்டு அழகிய குற்ருலம்போய் கற்ருர் போற்றுங் கண்ணுதற்கடவுளைக் கண்டு களித்தார். திருநெல்வேலி, திரு இராமேச்சுரம், திருச்சுழியல், திருக்கானப்பேர், திருப்புனவாயில் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு சோழவள நாட்டை யடைந்தார். இடையி லுள்ள தலங்களைத் தரிசித்து திருவாரூரை யடைந்தார். தியாகராஜப்பெருமானைப் போற்றி சுந்தரருடன் பரவையா ருடைய திருமடத்தை யடைந்து அவர் தந்த விருந்தை யுண்டு சிலநாள் திருவாரூரில் தங்கியிருந்தார். பன்முறை வேண்டி வன்ருெண்டரையும் அழைத்துக்கொண்டு, காவிரியின் தென் கரை வழியே இடையில் உள்ள திருக்கண்டியூர் திருச்சிராப் பள்ளி முதலிய அரிய திருத்தலங்களைப் பணிந்து கொங்குநாடு கடந்து மலை நாட்டை யடைந்து, கொடுங்கோளூர் வந்துசேர்ந் தார். திருநகர மாந்தர்கள் அரசரையும் ஆரூரரையும் எதிர் கொண்டு பணிந்தார்கள். நேரே திருமாளிகை செல்லாமல் திருவஞ்சைக்களத்தில் எழுந்தருளியுள்ள இறைவரை வழிபட் டார். பின்னர் திருமாளிகை சென்று தேவிமார்கள் செம் பொற் கலச நீர்வார்க்க, வன்ருெண்டர் மலரடியைப் பூசித்து விருந்து செய்து உபசரித்து உள்ளம் உவந்தார்.



வன்ருெண்டர் சிலநாள் அங்கு தங்கியிருந்த பின் திருவா ரூர்த் தியாகப் பெருமானைக் காண விரும்பிப் புறப்பட்டார். அவரைப் பிரிய மனமின்றி சேரர்கோவும் புறப்பட்டார். ஆரூரர் அவரைத் தடுத்து "நீர் இங்ஙனம் இருந்து அரசுபுரியும்" என்று பணித்தருளினர். சேரமான் பெருமாள் நாயனர், அன்றுவரை கருவூலத்தில் நிறைந்திருந்த செல்வம் முழுவதை யும் ஆடையணிகலங்களையும் பொதிகளாகக் கட்டி நம்பியாரூர ருக்கு வழங்கி ஆள்கள் மூலம் அவருடன் அனுப்பினர்.

வன்ருெண்டர் திருவாரூர் சென்று தங்கியிருந்து இரண்டாம் முறையாகத் தோழரைக் காண நினைந்து மகோ தைக்கு வந்தார். ஆராக் காதலுடன் அவரை வரவேற்று வணங்கி மன்னர் மகிழ்ந்தார்.

## கயிலை செல்லுதல்

சுந்தரமூர்த்தி நாயனர் ஒருநாள் திருவஞ்சைக்களம்போய், பெருமானை வழிபட்டுக் கயிலை போகத் திருவுளங்கொண்டார். அரனர் ஆணையின்படி மாலயனுதி வானவர்கள் ஐராவணம் என்ற வெள்ளானையுடன் திருவஞ்சைக்களம் வந்து வன்ருெண் டரை வணங்கி யழைத்தார்கள். சுந்தரர் திருவருளைச் சிந் தித்து யானை மீது ஏறிப் புறப்படும்போது தமது தோழரை நினைந்தருளினர். அந்த நினைவை யறிந்த சேரமான் பெருமாள் ஒரு புரவியின் மீது ஏறி திருவஞ்சைக்களம் வந்தார். யானை மீது தோழர் விண்வழி போவதைக் கண்டார். புரவியின் செவியில் ஐந்தெழுத்தை ஓதினர். அப்புரவி ஆகாயவழி பாய்ந்து சென்றது. யானையை வலம் வந்து சேரர்கோன் வன்ருெண்டரை வணங்கி முன் சென்ருர்.

சேரர்கோனை விட்டுப் பிரியாத சேனை வீரர்கள் வாள் கொண்டு உடல் தடிந்து, வீரயாக்கை பெற்று வான் வழியே அவருடன் சென்ருர்கள். நம்பியாரூரர் திருக்கயிலை சென்று, திருக்கோயிலுட் புகுந்து, தாய்ப் பசுவைக் கண்ட இளங்கன்று போல் உருகி, மரகதக் கொடியுடன் விளங்கும் பவளமலையைக் கண்டு பணிந்து நின்ருர். சிவபெருமான் திருவருள் புரிந்தார்.

"ஐயனே! சேரமான்பெருமாள் வந்து திருவாயிலில் நிற் கின்ருர்" என்று சுந்தரர் விண்ணப்பம் புரிந்தார். பெருந்தேவர் களைக் கொண்டு சேரர்கோவை யழைத்தார். சேரர் வேந்தர் பெருமான் திருமுன்பு சென்று பலமுறை பணிந்து அன்பினல் அகங் குழைந்து நின்ருர். ஆலமுண்ட அண்ணலார் புன் முறுவல் செய்து "சேரனே உம்மை யழையாமுன் வந்தனையே" என்று கேட்டருளினர். சேரர் கோமான், "ஐயனே! அடியேன் நம்பியாரூரரைப் போற்றிக்கொண்டு வந்தேன். உமது திருவரு ளாகிய வெள்ளத்தில் முழுகினேன். அந்த வெள்ளம் என்னை

இங்குகொணர்ந்துசேர்த்தது. மற்றொருவிண்ணப்பமும்உண்டு. தேவரீரைத் திருவுலாவினால் துதி செய்துளேன். திருச்செவி சாய்த்துக் கேட்டருள வேண்டும்'' என்று விண்ணப்பஞ் செய்தார். சிவமூர்த்தி அதற்கு இசைந்தருளினர். திருக்கயிலாய ஞான உலாவைச் சேரமான் பாடினர். சிவபெருமான் கேட்டு மகிழ்ந்து, "வன்றொண்டனும் நீயும் சிவகணத் தலைவர்களாக இருங்கள்'' என்று பணித்தருளினர். கயிலைமலையில் சேரமான் பெருமாள் பாடிய ஞானவுலாவைக் கேட்ட மாசாத்தனார் திருப்பிடவூரில் வெளிப்படுத்தினர். சேரர்கோன் சிவகணத் தலைவராய் என்றும் அகலாத சிவானந்தம் பெற்று இன்புற்றிருந்தார்.

வரலாறு முற்றிற்று.

## ஸௌராஷ்ட்ர நீதிஸம்பு

109. சகல ஜீவராசிகளிடத்திலும் காருண்யம், தவம், தானம், சாந்தி, தீயவை அஞ்சல், புலனடக்கம், சத்தியம் இவ்வேழு குணங்கள் எவனிடம் அமைந்துள்ளதோ, அவனிடம் ஸ்வர்க்கம் இருப்பதாக ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

110. பிராமணன் ஒருவன் நான்கு வேதங்களை ஓதியிருந்தும் அறநெறி விட்டு கெட்ட வாழ்வு வாழ்வாயினன் அவன் உண்மை பிராம்மணன் ஆகான். பிராம்மண வகுப்பில் பிறந்தும் கீழ் வகுப்பினனாக ஆகின்றான்.

111. ஓ ராஜனே! தனம், படிப்பு, உயர்குலம், இவைகள் தீயோர்களுக்கு தீச்செயல்களைப் புரிவதற்கு உதவுகின்றன. ஆனால் இவைகளே நல்லோர்களுக்கு நற்செயல்கள் புரிவதற்கும் உதவுகின்றன. ஒழுக்கமும் அடக்கமும் இவ்விரண்டுமே ஸாதுக்கு சொத்துக்கள்.

112. ஒருவன் நன் நடத்தை, ஜீவகாருண்யம், சத்யம் இம் மூன்று நல்ல குணங்களை சதா காலமும் விடாமல் கையாண்டு வருவானாயின் அவனே உலகில் நிஜ பிராம்மணன் ஆகின்றான். இதை மறதி இன்றி ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

113. கடன் வாங்கின பணத்தால் பிரகாசிக்காதே! உன் புகழை நீயே புகழாதே! கஷ்டகாலம் வந்தபோதிலும் பிறர்மேல் பழி போடாதே! கொடை கொடுத்துவிட்டு பின்பு அதைப் பற்றி யோசிக்காதே!

114. அதிர்ஷ்டம், படிப்பு, அதிகாரம், புகழ் இவைகள் அமைந்திருக்கும் ஒருவனைக் கண்டு பொறாமைகொள்ளும் மனிதர்கள் உடம்பில் யாதொரு வியாதியின்றியே தங்கள் சரீரங்களை உருக்கிக்கொள்ளுகின்றார்கள்.



# கற்பு

## சுகோதை

எல்லோருடைய முகங்களிலும் ஈயாடவில்லை. ஒரே கவலைமயம்; எப்படியாகுமோ? ஏதாகுமோ? என்ற ஏக்கம். அரண்மனைக்குப் பலர் வருவதும் போவதுமாகவே யிருந்தார்கள். பல மருத்துவரும் மருத்துவச்சிகளும் பரபரப்புடன் தத்தமது கடமைகளைக் கவனமாகச் செய்துகொண்டிருந்தார்கள். **வீமவர்மன்** என்ற மன்னன் கடவுளைச் சிந்தித்து தன் மனைவிக்குச் சுகப்ரசவமாக ஆகவேண்டு மென்று வேண்டி ஒரு புறம் சிந்தனைக் கடலில் முழுகி உயர்ந்த ஆசனத்தின் மீது அமர்ந்திருந்தார். சில மாந்திரீகர்கள் ஏதோ மந்திரங்களை முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு தோழிப் பெண் விரைந்து வேந்தனிடம் வந்து பணிந்து, "அம்மாவுக்குக் குழந்தை பிறந்துவிட்டது; தங்கப் பதுமை மாதிரி ஒரு பெண்மணி பிறந்துளது. அம்மாவுக்கு உடம்புக்கு ஒன்றும் ஆபத்தில்லை. ஆயாசமாக அயர்ந்து இருக்கின்றார்கள்'' என்றாள். பெரிய தலைச் சுமை இறங்கியது போல் இருந்தது மன்னனுக்கு. "முருகா'' என்று பெருமூச்சுவிட்டான். அந்த நற் செய்தியைச் சொன்ன தாதிக்குத் தன் கையில் இருந்த வைர மோதிரத்தைப் பரிசாக வழங்கினன்.

எல்லோருக்கும் கற்கண்டு வழங்கப்பட்டது. வறியார்க்கு பொன்னும் மணியும் பூந்துகிலும் நிரம்ப வழங்கி மன்னன் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தான். **விசாகை** என்ற அந்நகரம் முழுவதும் கொண்டாட்டம்.

மாந்திரீகர்கள் தாங்கள் மந்திரித்ததனால் தான் சுகப்ரசவமாகக் குழந்தை பிறந்தது. இல்லையேல் அரசமா தேவி பிழைத்திருக்கமாட்டாள் என்று மன்னனிடம் தற்பெருமை பேசினர்கள். மருத்துவர்கள் "தங்கள் பெரு முயற்சியாலும், மருந்தின் வலிமையாலுமே தேவிக்கு வந்த ஆபத்து நீங்கி குழந்தை பிறந்தது'' என்று வீண் டம்பப் பத்திரிகைப் படித்தார்கள். சில வேதியர்கள் தாங்கள் கூறிய ஆசிர்வாத வசனத்தாலேயே அம்மாவுக்குச் சீக்கிரம் பிரசவம் ஆயிற்று; இல்லையேல் தொல்லையே வந்திருக்கும் என்று வாய்ப்பந்தர் போட்டார்கள்; சில ஜோதிடசாத்திரிகள் "தாங்கள் செய்த ஜெபவிசேடத்தினாலேயே நன்மை ஏற்பட்டது'' என்று கூறிக் குதர்க்கம் பேசினார்கள். திருவருளால் நிகழ்ந்தது என்று எவரும் உணர்ந்தார்களில்லை. மன்னன் அவர்கள் கூறிய சொற்களைக்

கேட்டு உள்ளுக்குள் குறுநகை புரிந்து, "நீங்கள் எல்லோரும் கூறியதிலும் உண்மையுளது. இறைவன் கருணை உங்கள் எல்லோருடைய மூலமாகவும் வெளிப்பட்டது" என்று கூறி அவர்கள் எல்லோருக்குந் தக்க சன்மானங்களைத் தந்து மகிழ் வித்தான்.

விதிப்படி குழந்தைக்கு ஜாத கன்மங்களைச் செய்வித்து, அணிகலன்கள் பூட்டி **சுகோதை** என்று பேர் சூட்டினார்கள். பெற்றாரும் உற்றாரும் மகிழ சுகோதை வளர் பிறை மதிபோல் வளர்ந்தனள்.

ஐந்தாம் ஆண்டில் சுகோதை பள்ளியிற் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினாள். அரண்மனையில் அரச குடும்பத்தின ருக்கு என்று தனிப் பள்ளியுண்டு. அதில் தான் சுகோதை படித்துவந்தாள். மாணவர்களில் மூன்று வகை யுண்டு. முதல் மாணவர்க்கு கற்பூரக் குவியலில் தீப்பிடிப்பது போல் கல்வியறிவு வேகமாகப் பற்றும்; இடைமாணவர்க்கு விறகுக் குவியலில் தீப்பிடிப்பது போல் கல்வியறிவு மத்திமமாகப் பற்றும்; கடை மாணவர்க்கு வாழைத் தண்டில் தீப்பிடிப்பது எத்துணை சிரமமோ அதுபோல் இருக்கும். இந்த மூன்று மாணவர்களில் சுகோதை முதல் மாணவர் வரிசையில் சேர்ந்த வள். எந்தக் கடினமான பாடல்களையும் உடனே மனப்பாடஞ் செய்துவிடுவாள். ஒரு முறை இருமுறை படித்தவுடன் அவள் மனதில் அது சிலையில் எழுத்துபோல் நிலைத்து நின்று விடும். கற்ற பாடத்தை ஒரு போதும் மறக்கமாட்டாள். அடக்கமாகவும் தூய்மையாகவும் இருப்பாள். அரசகுமாரி யென்ற தற்பெருமை யின்றி வேலைக்காரர்களுடைய குழந்தை களுடன் எளிமையாகப் பழகுவாள். அவள் முகத்தில் எப்போ தும் ஒரு அலாதியான அமைதி குடிகொண்டிருக்கும்.

ஒரு நாள் ஆசிரியர் மாணவ மாணவிகளை நோக்கி "இராமா யணத்திற்கும் பாரதத்திற்கும் வேற்றுமை யாது? சுருங்கிய சொற்களால் விடையமையவேண்டும்" என்று கேட்டார்.

"இராமாயணம் திரேதாயுகத்தில் நிகழ்ந்தது. பாரதம் துவாபர யுகத்தில் நிகழ்ந்தது" என்றான் ஒருவன்.

"இராமர் முதலியோர் நால்வர்கள்; தருமர் முதலியோர் ஐவர்கள்" என்றான் ஒருவன்.

"ராமர் வனவாசம் பதினான்கு ஆண்டு இருந்தார்; தருமர் வனவாசம் பன்னிரெண்டு ஆண்டு இருந்தார்" என்றான் ஒரு வன். "இராமருக்குத் துணை செய்து அவர் புகழைப் பரப்பிய வர் அநுமார்; பாண்டவர்கட்குத் துணை செய்து அவர்கள் புகழைப் பரப்பியவர் கண்ணபிரான்" என்றான் ஒருவன்.



"இராவணன் மகோதரன் சொல்லைக் கேட்டுக் கெட்டான்; துரியோதனன் சகுனியின் சொல்லைக் கேட்டுக் கெட்டான்" என்றான் ஒருவன்.

"இராமாயணத்தில் சூரிய குமாரனாகிய சுக்கிரீவனுக்கு துணை செய்து இந்திர குமாரனாகிய வாலியைப் பகவான் கொன் றார்; பாரதத்தில் இந்திர குமாரனாகிய அர்ச்சுனனுக்குத் துணை செய்து சூரிய குமாரனாகிய கர்னனைப் பகவான் கொல் வித்தார்" என்றான் ஒருவன்.

"இராமாயணம் வால்மீகியால் பாடப்பெற்றது; பாரதம் வியாசரால் பாடப் பெற்றது" என்றான் ஒரு புத்திசாலி.

"இராமாயணத்திற்கு நீல அட்டை; பாரதத்திற்கு சிவப்பு அட்டை" என்று உளறியது ஒரு அசடு.

முடிவில் சுகோதை யெழுந்து குருநாதரைக் கும்பிட்டு "பெண்ணாசையால் விளைந்தது இராமாயணம்; மண்ணாசையால் விளைந்தது பாரதம். பெ—ம, என்ற ஒரு எழுத்துதான் இராமாயண பாரதத்திற்கும் வேற்றுமை" என்றாள்.

அவள் அவ்வாறு கூறியவுடன் அக் கல்விச் சாலையில் ஒரு கலகலப்பு ஏற்பட்டது. அவள் கூறியதில் உள்ள பொருளாழத்தை மாணவ மாணவியர் உணர்ந்து வியந்தார்கள். கரக்கம்பம் புரிந்தார்கள்.

ஆசிரியர் சுகோதை கூறிய விடையே சாலவும் சிறந்தது. அந்த விடை தனக்கும் புதியதாக அறிவுக்கு விருந்தாக இருக் கின்றது என்றும்; பெண்ணாசையால் கெட்டான் இராவணன்; மண்ணாசையால் கெட்டான் துரியோதனன்; ஆகவே ஆசையை அகற்றுவதே பாரத ராமாயணத்தைப் படிப்பதனால் வரும் பயன் என்று சுகோதை குறிப்பிட்டதையும் விளக்கி மாணவர் கட்கு இனிது உபதேசித்தார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் சுகோதையின் அறிவு நலத்தை எல்லோரும் நன்கு அறிந்தார்கள். சுகோதை அழ காலும் அறிவாலும் அன்பினாலும் வளர்ச்சியுற்றாள்.

இசைவல்லுனர் ஒருவர் சுகோதைக்கு இசைப் பயிற்சியை நன்கு போதித்தார். நாடகாசிரியர் நடனக்கலையைக் கற்பித் தார். ஜோதிட நூலாசிரியர் அவளுக்கு ஜோதிட நூலையும் கற்பித்தார்.

ஜோதிட சாஸ்த்திரி **சுதாகரன்** நல்ல அழகும் அறிவும் உடையவன். அரசனுடைய அபிமானம் பெற்றவன். பேச்சு வன்மையுடையவன். எப்போதும் சுறுசுறுப்பும் வாழ்க்கையில் விருவிருப்பும் பூண்டவன். ஆனால் அவனிடம் நல்ல பண்பாடு

அமையவில்லை. மலருக்குப்பின் முள் மறைந்திருப்பது போலே அவனுடைய கல்வி யறிவுக்குப் பின் தீய குணம் மறைந்திருந்தது. சூதும் வாதும் இரு கண்களாகவும், பொய்யும் புனை சுருட்டும் இரு கால்களாகவும், வஞ்சமும் நஞ்சமும் இரு கரங்களாகவும் அவனுக்கு அமைந்திருந்தன. இத்தனையையும் அவன் மறைத்துத் தனது ஜோதிட நூல் திறத்தினுல் பிறர் தன்னை மதிக்குமாறு நடந்துவந்தான்.

அவன் நாள்தோறும் மாலையில் ஒரு மணி நேரம் சுகோதைக்கு நவகோள்களின் நிலைகளையும், அவைகளின் சஞ்சாரங்களையும், உச்ச நீசங்களையும், பகை நட்பையும், வேறு பல நுணுக்கமான விஷயங்களையும் போதித்துவந்தான். வேத புருடனுக்கு ஜோதிடம் கண்ணுகத் திகழ்வது; ஆறு அங்கங்களில் முதன்மை பெற்றது. தொலையிலுள்ள பொருள்களைத் தெரிவிப்பது கண்; ஆயிரம் ஆண்டுகட்கு அப்பால் வரக்கூடிய சூரிய சந்திர கிரகணங்கள் முதலியவற்றையும் பலாபலன்களையும் பகர்வதும் ஜோதிட நூல். அதனுல் சுகோதை அதை அக்கரையாகப் பயின்ருள்.

இப்போது சுகோதைக்கு வயது பதினைந்து. மங்கைப்பருவம் அடைந்தாள். மெருகிட்ட பொன் விக்கிரகம்போல் விளங்கினுள். மென்மை மிக்க அவள் கூந்தல் மினுமினுத்து சுருண்டு அலை வீசுவது போல் மிளிர்ந்தது. சந்திரன் மழை முகிலுக்கு நடுவே ஒளி செய்வது போல அவள் திருமுகம் கூந்தலுக்கு இடையில் திகழ்ந்தது. அவள் குரல் கிஞ்சுகம் (கிளி) போல் இருக்கும். கிளிக்குப் பிரியமான கனி கொவ்வைக்கனி. நெஞ்சில் உள்ள கிளிக்கு உணவு வைத்ததுபோல் அவளுடைய சிவந்த இதழாகிய கொவ்வைக்கனி காட்சியளித்தது.

"கல்லும் புல்லுங் கண்டுருகப் பெண்கனி நின்ருள்"என்ற கம்பர் கவிக்கு அவள் இலக்கியமாக இருந்தாள். சுதாகரன் அவளைக் காணும்போதெல்லாம் காதல் பித்தேறிக் கவல்வான். அவன் உள்ளமும் உடம்பும் வெதும்பும். பெறுதற்கரிய பெண் மாணிக்கத்தை அவனுடைய பேதை மனம் விரும்பித் துடியா துடித்தது. எட்டாத மரத்திற்கு ஏணி வைத்துக் கொட்டாவி விட்டான். பலப்பல எண்ணி ஏங்கினுன். "அவளை அடையும் வழி யாது?" என்று யோசித்தான். ஒன்றும் புலப்படாது கலங்கினுன். மது வுண்ட வண்டு போல் மயங்கினுன். அரச குமாரியை முன்போல் சந்திக்க முடியாமல் இருப்பதைக்குறித்து மனம் அடைந்த வேதனைக்கு அளவே கிடையாது. ஏதாவது ஒரு சமயம் மன்னர்பெருமானைக் காணும்பொருட்டு அரண்மனைக்குப் போகும்பொழுது அங்கு அரச அன்னம்போல் திடீர் என்று சுகோதை தோன்றி மறைவாள். அச்சமயம் அவளுடைய பூரண எழிலையும் தோற்றத்தையுங் கண்டு களிப்பான். நெடுநேரம் பார்த்து மகிழ முடியாமைக்கு வருந்துவான்.



ஒருநாள் அரண்மனை நந்தவனத்தில் பளிங்குமேடையில் சுகோதை தன்னந்தனியே அமர்ந்து குயில்போன்ற இனிய குரலில் பாடிக்கொண்டிருந்தாள். அவளுடைய தோழிமார்கள் மலர் பறித்துக்கொண்டு இருந்தார்கள்.

அங்கு தற்செயலாக ஜோதிஷம் சுதாகரன் வந்தான். சுகோதையின் பாடலின் இனிமையும் அவள் தனிமையும் அவனுக்குள்ள மயக்கத்தை அதிகப்படுத்திவிட்டன. அவள் அருகில் அணுகினுன். அம் மாதரசி அவனைக் கண்டதும் திடுக்கிட்டு எழுந்துநின்ருள்.

சுதாகரன், "சுகோதை! சும்மா மேடையில் இரு; சுகந்தானே? பார்த்து பல நாட்கள் ஆயின. உன் ஜாதகத்தின்படி உனக்குப் பெரிய ஒரு சுகம் இப்போது வரப்போகின்றது. உனக்கு மகரலக்னம் அல்லவா? அது குருவின் வீடு. லக்னுதிபதியாகிய குருபகவான் மேடராசியில் இருந்து தனது சொந்த வீடாகிய லக்னத்தைப் பார்க்கின்ருர். கணவனுடைய சந்திப்பு உனக்கு விரைவில் கிடைக்கும். தங்கவிக்ரகம் போன்ற நீ அறிவுள்ள கணவனை அடைவது அல்லவா சிறப்பு..........." என்று பேசிக்கொண்டே போனுன்.

சுகோதை, "ஆசிரியரே! போதும்; பேச்சை நிறுத்தும். இதைப்பற்றியெல்லாம் அப்பா அவர்களிடம் பேசும். இங்கே ஆடவர்கள் வரக்கூடாது என்பதை நீர் அறியீரா? நீர் இங்கு வரலாமா? இங்கு வந்தது பிழை; திருமணம் ஆகாத என்னைப் பார்த்து கணவனுர் விஷயமாகப் பேசுவதும் பிழை. ஆசிரியராக இருப்பதனுல் மன்னித்தேன். முதலில் உமது ஜாதகத்தைப் பற்றி ஆராய்ந்துகொள்ளும். சற்றும் தாமதிக்காமல் போம்" என்று கடிந்து கூறினுள்.

சுதாகரன் அதுகேட்டு அஞ்சினுன். "சுகோதை! ஏன் இப்படி கோபிக்கின்ருய்? நான் ஒன்றுமே பிழையாகப் பேச வில்லையே. நான் உன்னைக் காணவும் பேசவும் எவ்வளவோ நாட்களாக விரும்பி மிடியனுக்குப் பெரும் புதையல் கிடைத்தது போல் உன் சந்திப்பு இங்கு கிடைத்தது என்று மகிழ்கின்றேன். திருமணப் பருவம் அடைந்த நீ என்னைப் போன்ற ஒருவனுடன் வாழ்வதுதானே முறை; முன் பின் தெரியாத ஒருவனை மணப்பதை விட பலகாலும் பழகிய என்னையே நீ கணவனுக அடையலாமே. நான் உன் சொற்படி நடந்து உன்னை என் குல தெய்வமாகக் கருதி ஆதரிப்பேன். உன் மனம் என்பால் கருணை செய்யட்டும். இரக்கமுள்ள நீ என்னை விரட்டியடிக்காதே" என்ருன்.

சுகோதை பெருஞ் சீற்றத்தை யடைந்தாள். "மூடனே! உன் வாய்த்துடுக்கை யடக்கு. உனக்கு ஏதோ கேடுகாலம் வந்திருக்கின்றதுபோலும். அரச குமாரியாகிய என்னைக்

கிள்ளுகீரையெனக் கருதினுய். அறிவில்லாத அசடனே! நீயா என்னை மணப்பது? பெண் சிங்கத்தைக் குள்ளநரி விரும்பியது போலும். இங்கு ஒருகணமும் நிற்கக்கூடாது; நிற்பாயேல் உன் தலை உடம்பில் இருக்காது. நெருப்பை சிற்றெறும்பு விரும்பியதுபோல் நீ என்னை விரும்புகின்ருய். அடே காவல்காரனே! இந்த மடையனை ஏன் உள்ளே விட்டாய்? இவனை வெளியே பிடித்துத் தள்ளு'' என்று கர்ஜித்தாள்.

சுதாகரன் நடுங்கி ஓடியே விட்டான். சுகோதை அவனுடைய அடாத செயலை நினைத்து வருந்தினுள். அவள் கள்ளம் அறியாத உள்ளம் படைத்தவள். ஒருவாறு தேறினுள்.

மோக பித்தேறிய சுதாகரன் தனியே இருந்து சுகோதையை அடைய வழி யாது? என்று சிந்தித்தான். தீய எண்ணங்கள் பல தோன்றின. சுகோதையின் தந்தையாராகிய வீரவர்மனிடம் வந்தான்.

"வாரும் ஜோதிடரே! வாரும்''

"மன்னர் பெருமானே! வணக்கம்.''

"ஜோதிடரே! எல்லாம் சுகந்தானே? வீட்டில் எல்லோரும் நலந்தானே? இரும். நமது செல்வப் புதல்வி சுகோதை மங்கைப் பருவம் அடைந்த நாள் நட்சத்திரம் எப்படி? பலா பலன் எவ்வாறு இருக்கின்றது? நன்கு ஆராய்ந்து கூறும்.''

சுதாகரன் அந்த நாளையும் நட்சத்திரத்தையும் நெடுநேரம் சிந்திப்பான்போல் நடித்தான். விரல்களை விட்டு ஏதோ எண்ணுவதுபோலவும், ஆகாயத்தை நோக்கியும் பூமியை நோக்கித் தலையை அசைப்பதுமாகப் பாசாங்கு செய்தான்.

"வேந்தர் திலகமே! உண்மையை ஒளிக்கவும் கூடாது. தாங்கள் கேட்டு மனம் வருந்தக்கூடாது. அதைச் சொல்ல என் நா கூசுகின்றது. தாங்கள் என் உயிரினும் இனியவர். தங்கள் நலத்தையே எப்போதும் நாடுபவன். தங்களுக்கு இப்படி நேரக்கூடாது.''

"ஜோதிடரே! உண்மையை உரையும். வருவது வந்தே தீரும். தாங்கள் அஞ்சவேண்டாம். பலனைப் பகரும்''

"மன்னரேறே! சுகோதை மங்கைப்பருவம் அடைந்த நாளும் கோளும் மிகவும் மோசமாக இருக்கின்றன. லக்கினத்தைச் சனி பகவான் பார்க்கின்ருன். பத்தாமிடத்தில் பாவக்ரகம். ஏழாமிடத்தில் பாவக்ரகத்தின் பார்வை படுகின்றது. குரு நீசம் பெற்றுவிட்டான். சுருக்கமாகச் சொல்லுகின்றேன். இந்த ஜாதகரீதியாக நமது நாடு நகரம் அழியும். பகைவர் வந்து இராஜ்யத்தைக் கைப்பற்றுவார்கள். குடிகள் மடிவார்கள். சுகோதைக்குத் திருமணம் ஆனுலும் கணவனும் மடிவான். நிரம்பவும் கெடுதல்கள் வரும்''.



"ஐயா! இதற்கு ஏதாவது பரிகாரம் உண்டா? எனக்குத் தீங்கு வந்தால் அதைப்பற்றி நான் வருந்தேன். என் உயிரினும் உயர்ந்த குடிமக்களுக்குத் தீங்கு வருமானுல் அதைக் கண்டு நான் பொறுக்கமாட்டேன்.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்''

என்று புறநானூறு புகல்கின்றது. ஆகவே குடிகளுக்குத் துன்பம் வராமல் தடுத்துக் காப்பாற்றும் கடமை எனக்கு உண்டு. நீர் நன்கு சிந்தித்துச் சொல்லும். தக்க பரிகாரத்தைத் தேடும்''

"இராஜசேகரரே! பரிகாரத்தைக் கூறுவேன். செய்வது கடினம். நான் நன்மையைத் தான் நவில்வேன். எது எதனுல் வருகின்றதோ அதை அதனுல் தான் போக்கவேண்டும். வருகின்ற இடரோ மிகப் பெரியது. எந்தப் புதல்வியின் மூலம் வருகின்றதோ அந்தப் புதல்வியை விட்டுவிடுவதுதான் தக்க பரிகாரம். நாடுநகரங்கள் கேடுற்று வருந்துகின்ற இப் பெரிய ஆபத்தைத் தடுக்க ஒரு உயிரை விட்டுவிடுவதுதான் தருமமும் கருமமும் ஆகும். பத்து பேருக்காக ஒருவரை விட்டுவிட வேண்டும் என்பது நீதிநூல். அரசே! எனக்குச் சொல்ல நா நடுங்குகின்றது. குற்றமாயின் மன்னித்தருள வேண்டுகின்றேன். பெற்று வளர்த்த புதல்வி; அழகும் அறிவும் நிறைந்த செல்வி; ஆனுல் அழகுள்ள மலரையும் சில சமயத்தில் வாடிவிடுமானுல் தூக்கி எறிந்து விடுகின்ருேம். ஆகவே சுகோதை தூங்கும்பொழுது ஒரு பெட்டியில் வைத்து ஓடுகின்ற நதியில் விட்டுவிட்டால் நாடு நகரத்திற்கு வருகின்ற கேடு விலகும். இதைத் தவிர வேறு வழியில்லை. பெண்பாவம் என்று பார்த்தால் கோடிக்கணக்கான பெண்களும் ஆண்களும் அழிவார்கள். பல்லோர் மரணத்தைத் தவிர்க்க நமது ஒரு குழந்தையைத் தியாகஞ் செய்துவிட வேண்டும். இத் தியாகத்தினுல் தங்கள் நாடும் நகரமும் தழைக்கும். அடியார்பொருட்டு சிறுத்தொண்டர் தனது அருமந்த ஒரு மகனைத் தியாகஞ் செய்தார் அல்லவா?.........'' என்று சாமார்த்தியமாகக் கூறினுன்.

மன்னன் முதலில் அதைக் கேட்டுத் திடுக்கிட்டான். பின்னர் கோடிக்கணக்கான மக்களின் நன்மையைக் கருதி தனது செல்வப் புதல்வியை விட்டுவிடுவதே உசிதம் என்று முடிவு கட்டினுன். மீண்டும் மீண்டும் மனங் குழம்பியது. கருணை ஒரு பக்கம் தடுத்தது. குடிகள் நலத்தை நாடவேண்டும் என்ற எண்ணம் ஒரு பக்கம் அத்தீமைக்குத் துணை செய்தது.

அன்று அமாவாசை. ஜோதிடம் சுதாகரனுடன் யோசித்து அன்றிரவு வெள்ளத்தில் விடுவது என்று

தீர்மானித்தான். காற்று போய் வரக்கூடியமாதிரி சில துவாரங்களை வைத்து, மிதப்பதற்கு ஏற்றபடி கீழே சடைகளை வைத்துக் கட்டி ஒரு பெட்டி தயார் செய்தான்.

நற்குணம் நிறைந்த தன் மகளை அன்று மாலை கண்டு மன்னன் அன்புடன் அவளை உபசரித்து ஆசி கூறினான். அப்படி வாழ்த்தும்போது அவன் கண்களில் நீர் சிந்தியது. அவன் உள்ளத்தில் அப்போது அடைந்த வேதனைக்கு அளவேயில்லை. பாசமும் நேசமும் எழுந்து அவன் உள்ளத்தை உருக்கின. "இந்த லட்சுமி போன்ற மகளை எவ்வாறு விடுவது?" என்று ஏங்கினான்.

மாலையில் சுகோதை பின்னிவிட்டு பூ முடித்து சிறிது நேரம் வீணையை வைத்துப் பாடினாள். இரவு உணவை யுண்டு பஞ்சணையில் படுத்து அமைதியாக உறங்கிவிட்டாள்.

ஜோதிஷனுடைய தூண்டுதலினால் இரவு ஒரு மணி வேளையில், அப் பெட்டியில் மன்னன் தன் மகளை அசையாமல் எடுத்துவைத்து கதவைச் சாத்தித் தாளிட்டு, ஒருவருக்குந் தெரியாமல் பெட்டியை வண்டியில் வைத்து நதி வெள்ளத்தில் விட்டுவிட்டான். அப்படி விடும்போது வேந்தன் தன் உயிரையே விடுவதுபோல் துடிதுடித்தான்.

ஜோதிடன் மன்னனை விட்டு மெல்லப் பிரிந்தான். வேகமாகச் செல்லுங் குதிரை மீது ஏறி விரைந்து நதியின் கரையில் சென்றான். இருபது கல் தொலைவில் சென்று நதிக்கரையில் அப்பெட்டியை நோக்கிக்கொண்டு நின்றான்.

பெட்டி நதிவெள்ளத்தில் மிதந்து போகும்போது சுகோதை விழித்துக்கொண்டாள். அவளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. வாய்விட்டு அலறினாள். "முருகா! முருகா!" என்று கதறினாள். தான் பெட்டிக்குள் இருக்குங் காரணத்தை யறியாது நடுங்கினாள். அந்த வேளையில் அவள் உள்ளம் பட்டபாட்டை எழுத எழுத்தோ சொல்லுதற்குச் சொற்களோ கிடையா. நடு இரவு; இருள்; வெள்ளத்துள் பெட்டியில் போகின்றாள் என்றால் பெண் உள்ளம் எப்படித் துடிக்கும்?

வழியில் நதிக்கரையில் வேட்டையாடி கூடாரம் அடித்துத் தங்கியிருந்த கரபுர மன்னன் மகன் விடியற்காலை நதியில் குளிக்கப் போயிருந்தான். அத் தருணத்தில் நதிக்கரை ஓரம் அப்பெட்டி வருவதைக் கண்டான். திடுக்கிட்டான். "என்ன அதிசயம்? அழகிய பெட்டி வருகின்றது" என்று எண்ணி நதியில் நீந்தி அப் பெட்டியை இழுத்துக் கரை சேர்த்தான். பெட்டியின் மேல்கதவைத் திறந்தான். கண் கூடாக வந்த திருமகளைப் போல் அதில் அழுதுகொண்டிருந்த உத்தமியைக் கண்டு ஆச்சரியமடைந்தான். அழகின் கொழுந்துபோல் அவள் காட்சி யளித்தாள்.



பெட்டியை விட்டு எழுந்து சுகோதை நாணத்துடன் நின்றாள். "முருகா முருகா" என்று நாம் அழைத்தோமே. அந்த முருகனே வந்து தன்னைக் காப்பாற்றியதாக நினைத்தாள். முருகப் பெருமான் என்றால் ஆறுமுக மில்லையே? கண் இமைக்காதே? கால் நிலந் தோயாதே? ஆகவே இவர் ஒரு அரசகுமாரராகத்தான் இருக்கவேண்டும்" என்று எண்ணினாள். சில வினாடிகள் சென்றன. அவர்கள் இருவரும் மெய் மறந்து நின்றார்கள். அவர்கள் இருவர் உடம்பிலும் ஒரு மின்சாரசக்தி பாய்ந்தது. சொல்ல முடியாத உணர்ச்சியும் அன்பும் உதித்தன.

"பெண்மணி! நீயார்? உன் பேர் யாது? உன்னைக் கண்டால் ஒரு அரசகுமாரி போல் தோன்றுகின்றது. நீ இப்படி அநாதை போல் நதி வெள்ளத்தில் பெட்டியில் வரக் காரணம் யாது? விரோதிகள் பகை காரணமாகச் செய்தார்களா? உள்ளதை யுரை"

"அரசே! வணக்கம். நான் விதர்ப்ப நாட்டு வீர வர்மன் மகள். என் பேர் சுகோதை. என் தந்தையார் என்மேல் அளவற்ற அன்புடையவர். நான் இப் பெட்டியில் எவ்வாறு வந்தேன் என்பதை என்னால் உணர முடியவில்லை"

"பெண்ணரசே! வருந்தாதே. கரபுரத்து மன்னன் மகன். **இராஜேந்திரன்** என்பது என்பேர். வேட்டையாடி இங்கு இரவு தங்கினேன். விடியற்காலை நீராடும்பொருட்டு வந்தேன். பெட்டியைக் கண்டு கரை சேர்த்தேன். தெய்வம் உன்னை எனக்குத் தந்தது.

அரச குமாரியும் அரச குமாரனும் கூடாரஞ் சேர்ந்தார்கள். ஒருவரை யொருவர் நேசித்து மகிழ்ந்தார்கள். நதி வெள்ளத்தில் சென்ற சுகோதை இன்ப வெள்ளத்தில் அழுந்தினாள். துன்பத்தை இன்பமாக ஒரு கணத்தில் மாற்றிய இறைவனை வழுத்தினாள்.

இராஜேந்திரன் தான் வேட்டையாடி உயிருடன் பிடித்து வைத்திருந்த இரண்டு புலிக்குட்டிகளை அப் பெட்டியில் வைத்து கதவை மூடி பழையபடியே நதியில் விட்டுவிட்டான். மன்னன் மகனுக்கு அது ஒரு வேடிக்கை.

புலிக் குட்டிகளுடன் கூடிய பெட்டி மிதந்து வந்தது. ஜோதிஷத்தில் வல்ல சுதாகரன் தொலைவில் வரும் பெட்டியைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சியடைந்தான். தன் எண்ணம் பலித்துவிட்டதென்றும், ஒப்பற்ற இன்பத்தை யடையப் போவதாகவும் எண்ணினான். உவகை பொங்கிற்று. நதியில் நீந்தி அப்பெட்டியைக் கரை சேர்த்தான்.

என் ஆருயிரே! என் கண்மணியே! என் உயிரும் உடலும் இனி உனக்கேதான். வா. என்னைத் தழுவு. உன் கரத்தினால்

என்னைப் பிடி" என்று பிதற்றிக்கொண்டு பெட்டியைத் திறந்தான். பசியுடன் வாடிக் கிடந்த புலிக்குட்டிகள் ஒரே பாய்ச்சலாக அவன் மீது பாய்ந்துப் பிடித்துக் கிழித்து அவன் உடம்பிலுள்ள மாமிசத்தைத் தின்றுவிட்டுச் சென்றன.

இராஜேந்திரன் சுகோதையுடன் தேரேறி நதிக்கரை வழியே திரும்பிப் போகும்போது வழியில் அப்பெட்டியையும் மாண்டு கிடக்கின்ற மனிதனையுங் கண்டான். சுகோதை மாண்ட மனிதனை உற்று நோக்கினுள். ஜோதிஷன் என்று அறிந்தாள். அவள் மனதில் பலப்பல எண்ணங்கள் தோன்றின. இவன் செய்த சூழ்ச்சியாக இருக்கும் என்று கருதினுள். இருவரும் கரபுரம் சேர்ந்தார்கள்.

மகளை நதியில் விட்டபின் மன்னன் பெருந்துயர முற்று உணவும் உறக்கமும் இன்றி பெருங்கவலையுற்ருன். அரசகுமாரி மாயமாய் மறைந்தது பற்றி அரண்மனையில் பெரும் கவலை யேற்பட்டது. பலர் பலவாறு சந்தேகங் கொண்டார்கள்.

ஒருநாள் மன்னனிடம் ஒரு திருமண வோலை வந்தது. அதில் வீரவர்மன் மகள் சுகோதைக்கும் கரபுர வேந்தன் மகன் இராஜேந்திரனுக்கும் திருமணம் என்று இருக்கக் கண்டு அதிசயித்தான். குடும்பத்துடன் திருமணத்திற்குச் சென்று செல்வப் புதல்வியைக் கண்டு களிப்புற்ருன். அவள் மூலம், சுதாகரன் மாண்டதையும் அறிந்து, அவன் சொல்லை நம்பி செல்வப் புதல்வியை நதியில் விட்ட தன் அறியாமையை எண்ணிக் கவன்ருன். திருமணம் இனிது நிகழ்ந்தது. இராஜேந்திரனுடன் சுகோதை இனிது வாழ்ந்து இன்புற்ருள்.

—●—

உ

முருகா

# விநாயகர் வழிபாடு

— வேலூர் அன்பன்
மு. பெருமாள்

கண்ணே! கணபதி! நாளை விநாயக சதுர்த்தி விசேஷ வழிபாடல்லவா? ஆகவே நீ இன்று மாலையே நந்தவனம் சென்று வில்வமும், வன்னிப்பத்திரமும், அருகம்புல்லும் சேகரித்து வருக.

அம்மா! எனக்கு நம்பிக்கை யில்லாத இதுபோன்ற வேலைகளை இனிநான் செய்யமாட்டேன். நீங்களும் நியமம் தவருமல் பலஆண்டுகளாய் இதுபோன்ற வழிபாடுகளைச் செய்து வருகின்றீர்களே! என்ன முன்னேற்றத்தைக் கண்டீர்கள்? பணத்தையும், நேரத்தையும் உடல் உழைப்பையும் இங்ஙனம் விரையம் செய்வது வீண் வேலையாகும். எனவே அறிவுக்கு ஒப்பாத இதுபோன்ற செயல்களை இனி தாங்கள் நிறுத்திவிடுவது நலமாகும்.

கணபதி! என்னடா அப்பா! இப்படியெல்லாம் விபரீதமாய் பேசத் துணிந்து விட்டாய்! நம் குடும்பத்துக்கு இருப்பவன் நீ ஒருவன்தானே



நீ செய்ய மறுத்தால் வேறு யார் செய்வார்கள்? உன் தந்தை விநாயகப் பெருமானை வழிபட்டதால்தான் எல்லா வகையிலும் முன்னேற்றம் அடைந்ததாக, என்னிடம் பன்முறையும்பகர்ந்துள்ளார். அவர் விநாயகர் உபாசனை அன்பின் காரணமாகத்தான் உனக்கு "கணபதி" என்று பெயரிட்டார். மேலும் அவர் தனக்குப் பின்னரும் "நம் வீட்டில் விநாயகர் வழிபாட்டைச் சிறப்பாக நடத்திவர வேண்டும்; இதுதான் என் ஆன்ம சாந்திக்காக நீங்கள் செய்யும் நன்றியான நற்றெண்டாகும்" என்று என்னிடம் தமது மரணத் தருவாயிலும் மொழிந்து மறைந்தாரே! தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதும், அவர் அறக்கடமைகளை நிறைவேற்றுவதும் தானே, அவர் வழிவந்த தனயனுகிய உன் கடமையாகும். சைவப் பரம்பரையில் தோன்றிய நீ இங்ஙனம் மாறுபட்டுப் பேசலாமா?

கால மாறுதலைக் கருத்தில் கருதாமல் கூறுகின்றீர்கள். மூடப் பழக்க வழக்கங்களில் மூழ்கக் கூடாதம்மா! முன்னேற்றமளிக்காத காரியங்களை, என் தந்தையார் செய்து வந்துள்ளார். அதைத் தொடர்ந்து நானும் செய்து மூடப் பழக்கமான வாழ்க்கையை விருத்தி செய்து வரவேண்டுமா என்ன? மூடப் பழக்கங்களும் முட்டாள்தனமும் தான் நம் சைவப்பரம்பரைப்புகழுக்குப் பெருமையின் சின்னங்களா? பெரியோர்கள் செய்து வந்துள்ளார்கள் என்பதற்காகப் பயந்து, தன் அறிவையும், ஆராய்ச்சியையும், அறியாமைப் பாசறையில் அடைத்து வைத்து விட்டு; எக்காரியத்தையும் தொடர்ந்து செய்துவர நான் தயாராகயில்லை. எனவே என்னை இனி இதுபோன்ற காரியங்களைச் செய்யுமாறு நிர்ப்பந்தம் செய்யாதீர்கள்.

மகனே கணபதி! ஏன் இவ்வளவு பிடிவாதமாய் மாறுபட்டுப் பேசுகின்ருய்? உன் தகப்பனுர் உள்ளபோது நீ இங்ஙனம் பேச வில்லையே! நாஸ்தீகப் பிள்ளைகளோடு சேர்ந்து அவர்கள் சொல்வதை நம்பி நீ இங்ஙனம் கெட்டுவிட்டாயா? நல்லவர்கள் நட்புதான் நன்மை செய்யும். வேண்டாமப்பா இந்த விபரீத புத்தி.

அம்மா! எனக்கு ஒன்றும் மாறுபாடுமில்லை. கீறுபாடுமில்லை. அப்பா இருக்கும்போது எனக்குப் புத்தி தெளிவுயில்லை. மேலும் அச்சத்தால் அடங்கிக் கிடந்தேன். எனவே இனியும் அது போன்று நடந்து கொள்ள நான் அறிவு வளர்ச்சி யில்லாதவனுக யில்லை. எதையும் பகுத்தறிவால் யோசித்து முடிவுசெய்யவேண்டும். கண்ணை மூடிக் கொண்டு பழைய பழக்க வழக்கங்களையே கட்டிப் பிடித்துக்கொண்டிருக்கக் கூடாது.

புனிதவதியம்மையார் நன்ருக வாசித்தவர்கள். கேள்வி ஞானமுண்டு. தன் மகனைத் திருத்தம் செய்யவேண்டுமெனக் கருதி, 'அப்பா கணபதி! விநாயகர் வழிபாடு சம்பந்தமாக உனக்குள்ள சந்தேகங்களைக் கேள். நான் விளக்கம் கூறுகின்றேன்' என்ருர்.

அம்மா! உங்களுக்கு என்ன தெரியும்! மேலும் என்னைத் திருத்த முடியாது. எனவே இது விஷயத்தில் எதற்காக நம் நேரத்தை வீணுகக் கழிக்கவேண்டும்?

கணபதி! உன் கருத்தில் உள்ளதைக் கேள். தெரிந்தவரை விடை கூறுகின்றேன்.

சரி; என் கேள்விக்குப் பதில் கூறுங்கள். விநாயகர் அவதாரமே விபரீதமாகயிருக்கின்றதே! அந்த தெய்வத்தைஏன் வணங்கவேண்டும்?

புராண வரலாறுகளில் பலர் தங்கள் சொந்தக் கருத்துக்களைப் புகுத்தி வரைந்துள்ளனர். அதனுல் உன்போன்ற இளைஞர்கட்கு விபரீதமான ஐயப்பாடுகள் தோன்றுவது இயற்கைதான். எனின் அவைகளில் அறிவுக்குப் பொருந்தாத வியாக்கியானங்களை நாம் கவனித்தல் கூடாது. அழிந்துபோகும் மனித சக்தியின் அறிவைக் கொண்டு, அழியாத ஆண்டவனின் அருள்விளையாடல்களின் தன்மையை அளவு கட்டிக் கூறமுடியுமா? முக்கால முணர்ந்த மகான் களாலும், உணர்ந்தும், பேசவும் இயலாத மகத்தான ஆண்டவன் தன்மைகளை, மனிதத் தன்மையில் நிகழும் செயல்களை உபமானமாக வைத்து ஒப்பிட்டுப் பேசுவதும் எழுதுவதும் எங்ஙனம் பொருந்தும்?

ஊனமே மேனியான (நாம்)மனிதர், ஞானமே மேனியான இறைவன் நம்மைப் போன்று சாதாரண மனிதச் செயல்களில் ஈடுபட்டு நடந்தார் எனப் புனைந்து பேசுவதும் எழுதுவதும், அவைகளை நாம் நம்புவதும் அறிவுடைய செயலாகாது. கற்பனைக்கும் எட்டாத பொய்க் கூற்ருகும். நீ கேள்விப்பட்ட விநாயகர் அவதார வரலாறு மிக ஆபாசமானதாகும். அது கடவுள் தன்மைக்குப் பொருந்தாத பொய் கற்பனையாகும். எனவே நீ அதை நம்பற்க.

ஆன்ம கோடிகளின் நன்மையை முன்னிட்டு அருவமும், உருவமும் கடந்த ஆண்டவன், காரண, காரியங் கருதி கணபதி (பிரணவ) வடிவந் தாங்கினுர். அம் மேனியும் உருவமும், நம் போன்று பஞ்ச கிருத்தியங்களால் இணைக்கப்பட்டதன்று. அவர் முன்னவராய் பிரணவ வடிவந் தாங்கி வந்து, வந்த காரியத்தை (கஜமுகாசூர சம்மாரத்தை) முடித்து, உலக மக்கள் உய்யும்பொருட்டு பிரணவக் கோலத்தோடு காட்சி யளித்து வருகின்ருர். பின்னர் அவர் அப் பிரணவத்தின் பெருமையை விளக்க பின்னவராய் (முருகப் பெருமானுய்)த் தோன்றி காட்சி யளித்து அன்பர்கட்கு கருணை பாலிக்கின்ருர். வெல்லக் கட்டி உருண்டையாக யிருந்தாலும், அல்லது தட்டையாக யிருந்தாலும், அல்லது உடைந்து தூளாக யிருந்தாலும், நமக்கு வேண்டியது அதன் இனிப்புத்தானே. அதேபோன்று ஆண்டவன் எந்த வடிவாய் இருந்தாலும் நமக்கு வேண்டியது அவர் அருள்தானே!

விநாயகர் சுமார் அறுநூறு ஆண்டுகட்கு முன்னர் ஒரு பிரிவினரால் வடநாட்டிலிருந்து (இங்கு) தமிழ் நாட்டிற்கு இறக்குமதி செய்யப் பட்ட தெய்வந்தானே!

கணபதி! நீ கூறுவது பிசகு. திருவள்ளுவர் ஆண்டு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகும். அவர் காலத்திய தமிழ் மூதாட்டியாம் ஔவை தமிழ் மொழிக்குத் தனிப்பெருமையைத் தேடித் தந்த திருவாட்டியன்ருே! அவர் தமிழகத்தில் அன்றே விநாயகப் பெருமானை வழிபட்டுத்தானே பல அற்புதத் தமிழ்க் காவியங்களை ஆக்கி தமிழ் மொழிக்குத் தக்க ஆக்கந் தந்தார்.

சந்திரனும், இந்திரனும், ராவணனும், மற்றுமுள்ள தேவர்களும் விநாயகப் பெருமானை வணங்கிப் பெருவாழ்வு பெற்ற யுகங் கடந்த வரலாற்றை நான் உனக்கு விளக்க விரும்பவில்லை. இந்த கலியுகத்தில் தமிழகத்தில் விநாயகப் பெருமானை வணங்கி வழிபட்டு பெருவாழ்வுபெற்ற பெரியோர்களையேஉனக்கு நினைவூட்டவிரும்புகின்றேன்.



சந்தான குரவர்களான நம்பியாண்டார் நம்பியாருக்கும், மெய் கண்ட தேவருக்கும், நற்காட்சியளித்து நல்லுபதேசஞ் செய்து வடமொழியிலுள்ள சிவஞான போதம் முதலான சித்தாந்த சாத்திரங் களைத் தமிழ் மொழியில் வரைய அருள் செய்தவர் விநாயகப் பெருமான் தானே! அன்று விநாயகப் பெருமான் அனுக்கிரகம் செய்யவில்லை யெனின் இன்று உன் தாய்மொழியான தமிழில் சிவஞான போத முதலான சிறப்பான நூல்கள் வெளி வந்திருக்குமா?

எவராலும் ஈடுயிணை கூற இயலாத அளவில் ஆயிரம் ஆயிரமாக அற்புதத் திருப்புகழ்ப் பாடல்களைப் பாடிய அருள் மொழியரான அருணகிரிநாத வள்ளலார் "முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில் முற்பட எழுதிய முதல்வோனே" என்று விநாயகப் பெருமானுக்கு தமிழின் பெருமையை மேருமலையில் வரைந்ததற்காக வணங்கி நல் வாழ்த்துக் கூறியுள்ளாரே. இந்த உண்மையை உன் போன்ருர் உணர்ந்தார்களா?

"ஓம்" என்ற தமிழ் எழுத்தின் பிரணவ உருவமாய் விளங்கும் இறைவனை; மாநில மலைகட்கெல்லாம் தலைமை சான்று நிற்கும் மேரு மலையில் முதல் முதலாகத் தமிழ் மொழியை வரைந்து தமிழுக்கு ஆக்கமும், ஊக்கமும் பெருமையும் தேடித் தந்த தனிப்பெரும் முதற்கடவுளை; வாசனை பொருந்திய மலர்களை அன்போடு சாத்தி வணங்கும் அடியார்கட்கு, கற்பகத் தருவைப் போன்று கருணை பாலிக்கும் கணபதி யெம்பெருமானை; கனிந்த அன்பினுல் கருத்தூன்றி வணங்கும் அடியார்கள் கருத்தை விட்டகலாத கர்த்தனை; தந்தையாயிருப்பினும் முறை வழுவாது தருமநீதி வழங்கும் தெய்வ நாதனை; கணங்கட்கெல்லாம் பதியாய் நின்ற கணபதியை; தனக்குமேல் நாயகனில்லாத விநாயகப் பெருமானை; வணங்குவோர்க்கு விக்கினங்கள் வந்தடையாமல் காக்கும் விக்கினேஸ்வரனை; நன்றியில்லா முறையில் நம்பிக்கை யில்லையென வணங்காமல் விடுவதும், பேசுவதும் முன்னேற்றத்துக்கா அல்லது அழிவுக்கா என்று சிந்தித்துப் பார்ப்பாயாக. ஆற்றின் கரையில் தாகவிடாயில் தவித்து நிற்கும் ஒருவன், ஆற்றில் ஓடும் அருமையான நீரை அருந்தேன் என்ருல் அதனுல் ஆற்று நீருக்கா நட்டம்? பருகினுல் இன்பம். வணங்கினுல் வாழ்வு. எனவே விநாயகர் வழிபாடு தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு இருந்து வருகின்றது. காலங்கடந்த இந்த இறை வழிபாட்டிற்குக் காலத்தைக் கணக்கிட்டுக் கூறுவது தவறு. கொலம்பஸ் என்ற வெளிநாட்டான் இந்தியாவுக்கு வர மார்க்கம் கண்டுபிடிக்கா முன்னர் இந்தியா என்ற நாடு இல்லாமலா யிருந்தது? அமெரிக்காவில் சுவாமி விவேகானந்தர் சென்று இந்து மத தர்மத்தை விளக்காத முன் இந்தியாவில் இந்து மத தர்மம் இல்லாமலா இருந்தது? இருந்ததைத் தானே விளக்கமாக அவர்கள் விளக்கினுர்கள். எனவே எந்த ஒரு பிரிவினராலும் இத் தமிழகத்தில் விநாயகர் வழிபாடு இறக்குமதி செய்யப்படவில்லை. இறக்குமதி செய்யும் பொருளல்ல விநாயகர் வழிபாடு. குரோத மனப்பான்மையினுல் எழுந்த இதுபோன்ற கற்பனைக் கூற்றை நீ கருத்தில் கொள்ளாதே.

மற்ருெரு ஐயம். விநாயகர் சதுர்த்தியில் விநாயக விக்கிரகத்தை வைத்து வணங்கி வழிபாடு செய்துவிட்டு மூன்ரும் நாள் கொண்டு போய் கிணற்றிலும் குட்டையிலும் போட்டு உடைத்தால் அது தவ

றில்லை. தோஷமில்லை. ஆயின் சிலர் அதில் நம்பிக்கை யில்லாமை யால் அந்த விக்கிரக வழிபாடு வேண்டாம் என்று, நாற்சந்தியில் வைத்து உடைக்க முற்பட்டால் உடனே ஏன் எல்லோரும் உடைப் பவர்களைத் தீவிரமாக எதிர்க்கவேண்டும்?

இருவர் செயலிலும், சிந்தனையிலும் வேற்றுமை யுள்ளது. பக்தி யினால் விதிப்படி சதுர்த்தியில் விநாயக விக்கிரகத்தை வைத்துப் பூசித்துவிட்டு, மண்ணால் செய்யப்பட்டதால் பின்னமடைந்து விடு மென்று கருதி, தொடர்ந்து வைத்திருக்க முடியாமல், அன்போடு ஆராதனை செய்வித்து கிணற்றிலோ குட்டையிலோ விடுகின்றார்கள். ஆயின் பக்தியில்லாமலும், தெய்வம் என்ற உணர்ச்சியில்லாமலும் நாஸ்திக மனப்பான்மை கொண்டு விநாயகர் விக்கிரகத்தை உடைக்க முற்பட்டால் யார்தான் எதிர்க்கமாட்டார்கள். இது எங்ஙனம் நேர்மையான செயலாகும்?

மேலும் விநாயகர் வழிபாட்டால் முன்னேற்றம் ஏதேனும் உண்டா எனக் கேட்கின்றாய்! இதென்ன வியாபாரக் கணக்கா வரவு செலவு பார்த்துசெய்ய? இறைவனை வணங்கவேண்டியது நமது நித்தியக் கடமை.

**பிறவி என்பது துன்ப மயமானது. அறியாமையினால் நாம் அதை இன்ப மயமாக எண்ணி ஏமாற்றம் அடைகின்றோம். எனவே பிறவித் துன்பம் அற்றிட இறைவழிபாடு செய்ய வேண்டியது நம் நீங்காக் கடமையாகும் என்பதை நினைவில் கொள்க. நமக்கு முன்னே ஆயிரக் கணக்கான மகான்களும், பல கோடிக் கணக்கான மக்களுமான முன்னோர்கள் வழிபட்டு முன்னேற்ற மடைந்த அறவழிப் பாதையில் நாமும் சென்றால்தானே நல்ல முன்னேற்றம் காணலாம். நமது நாட்டு மகான்களுடைய நல்வாக்கிலும், வழியிலும் நம்பிக்கை கொள்வாய் மகனே! பெற்றோர்களாகிய நாங்கள் உன் முன்னேற்றத்தை நாடாமல் உன்னை மூடனாக்கவா முயற்சிப்போம்? இறைவழிபாட்டை இவ்வளவு வற்புறுத்திப் பேசுவதால் எனக்கு ஏதேனும் சொந்த நன்மையா! கண்ணே! கணபதி! என்னுடைய ஏக புத்திரனை உனது முன்னேற்றங் கருதியல்லவா நான் இன்னும் இந்தப் பூதவுடலைச் சுமந்து திரிகிறேன். இல்லையேல் உன் தந்தையை அன்றே பின்பற்றியிருப்பேன்! நீ இவைகளையெல்லாம் சிந்தித்து அறியாமையால் பேசுவதை விட்டு இறைவழிபாட்டில் ஈடுபடுக" என்று உருக்கமாகக் கண்ணீர் சொரிந்தவண்ணம் கூறினாள் புனிதவதி.**

**தன் தாயாரின் உருக்கமான வேண்டுகோளையும் கண்ணீரையுங் கண்டு உருகி அடியற்ற மரம் போல் வீழ்ந்து வணங்கி "அன்னையே! என்னை மன்னித்து விடுக. தாங்கள் இவ்வளவு தெளிந்த அறிவும் ஞானமும் உடையவர்கள் என்பதை இன்று கண்டு தெளிந்தேன். என் ஐயங்களும் ஒழிந்தது. இதோ விநாயகர் சதுர்த்தி வழிபாட்டுக்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்கின்றேன்" என்றான்.**

**மகனை வாரியணைத்து ஆசீர்வதித்து மலர் பறித்துவரச் செய்து முன்னவன் வழிபாட்டை முறையாய்ச் செய்து மகிழ்ந்தாள் புனிதவதியம்மை.**

வேலும் மயிலும் துணை.

## மதுரை திருவருள் தவநெறி மன்றம்
### தமிழகத்தில் சென்ற மாதம் செய்த சமயப் பிரசாரம்

மன்றத் தலைவர் திருவருள் தவயோக சிலத்திரு **சோமசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்** தலைமையில் பல அறிஞர்கள் விரிவுரையுடன் மதுரையில் ஆவணி 22உ அன்று கூட்டுப் பிரார்த்தனை தொடங்கப்பட்டது. திங்கட் கிழமைதோறும் கூட்டுப்பிரார்த்தனை தொடர்ந்து நடைபெறும்.

## திருவருள் தவநெறி மன்றச் சார்பில் நடந்த சொற்பொழிவுகள்

சொற்பொழிவாளர்: **திரு. திருமாமணி சிவம்**

| நாள் | ஊர் | பேசிய பொருள் |
|---|---|---|
| விஜய ஆவணி | | |
| 1. 4உ | சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் | 'பிரார்த்தனை' |
| 2. 8உ | ,, கிளை மன்றத்தில் | 'திருவருளும் பிரார்த்தனையும்' |
| 3. 15உ | நரசிங்கபுரம் | 'பிரார்த்தனையும் சந்திரகாசாவும்' |
| 4. 23உ | மதுரை | 'சந்திரகாசா' |
| 5. 24உ | ,, | 'வேண்டும்' |
| 6. 29உ | சென்னை சிந்தாதிரிப்பேட் | 'இறையும், இரையும்' |

**சித்தாந்த பிரசங்காமிர்தம் P. C. சமரபுரி முதலியார்**

| நாள் | ஊர் | பேசிய பொருள் |
|---|---|---|
| விஜய ஆவணி | | |
| 1. 4உ | சிதம்பரேஸ்வரர் தேவஸ்தானம் கிளை சென்னை | 'ஸ்ரீமாணிக்கவாசகர்' |
| 2. 6உ | திருவேட்டீச்சுரன்பேட்டை | 'பிரதோஷ மகிமை' |
| 3. 8உ | சிதம்பரேஸ்வரர் தேவஸ்தானம் கிளை | 'மீனாட்சி திருமணம்' |
| 4. 13உ | சுந்தரேஸ்வரர் தேவஸ்தானம் இராயப்பேட்டை சென்னை | 'மண்சுமந்த திருவிளையாடல் தத்துவம்' |
| 5. 15உ | இந்து தரும சங்கம், மயிலாப்பூர் சென்னை | 'சமய வாழ்வே மக்கள் உயர வழி' |

சொற்பொழிவாளர்: **திரு. க. முத்துசாமி பிள்ளை.**

| நாள் | ஊர் | பேசிய பொருள் |
|---|---|---|
| விஜய ஆவணி | | |
| 1. 5உ | முத்துகாபட்டி | 'சைவநீதி' |
| 2. 6உ | ,, | 'கைகேசி சூழ்வினை' |
| 3. 8உ | எருமைப்பட்டி | 'சைவநீதி' |
| 4. 10உ | நாமக்கல் | 'கைகேசி சூழ்வினை' |
| 5. 11உ | ,, | 'சைவநீதி' |
| 6. 14உ | ,, | 'கந்தரநுபூதி' |
| 7. 17உ | சேந்தமங்கலம் | 'கைகேசி சூழ்வினை |
| 8. 22உ | லாலாப்பேட்டை | ,, |
| 9. 25உ | காஞ்சிபுரம் | 'சைவநீதி' |
| 10. 26, 27உ | இராமனுதபுரம் | 'கந்தரநுபூதி' |
| 11. 28உ | நாமக்கல் | 'புனிதவதியார்' |
| 12. 30உ | காஞ்சிபுரம் | 'அன்பர் பணி' |

நாமக்கல்லில் கிளைமன்றம் தொடங்கி வைக்கப்பட்டது.

விஜய ஆவணி 4உல் சென்னை சிந்தாதிரிப்பேட்டையிலும், விஜய ஆவணி 15உ நரசிங்கபுரத்திலும் கிளை மன்றங்கள் தொடங்கி வைக்கப்பட்டன.

உ
முருகா

காங்கேயநல்லூர் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி கோயில்

# ஸ்கந்தஷஷ்டி லக்ஷார்ச்சனை

எல்லா நலங்களையும் எய்தி இருநிலத்தில்
உல்லாச மாக உயர்வடைவர்— நல்லார்வாழ்
காங்கேய நல்லூர்வாழ் கந்தவேள் பொன்னடியைப்
பாங்காகப் போற்று பவர்.

மெய்யன்புடையீர்!

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு, அண்ணலும் அதுகண்டு அருள் செய்யா நிற்கும்" என்ற தமிழ் மறையின்படி இறைவனைப் பல மலர்கள் இட்டு வழிபடுதல் வேண்டும். லட்சார்ச்சனை மிகவும் சிறந்த வழிபாடாகும். அதன் சிறப்பைத் திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுமாறு காண்க.

பூவனூர்ப் புனிதன் திருநாமந்தான்
நாவில் நூறு நூருயிரம் நண்ணினுர்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்களாவரே.

ஆதலின் கந்தர் சஷ்டியின்போது ஆறுமுகப் பெருமானுடைய ஆறு திருமுகங்களுக்கு ஆறு நாட்களிலும் ஆறு சிவாச்சாரியர்கள் 18 காலங்களில் நூற்றெட்டு ஆயிரம் மந்திரங்களைக் கூறி, ஆறுவகை மலர்களினுல் அர்ச்சித்து வழிபட ஏற்பாடு செய்துளது. அன்பர்கள் அனைவரும் இப்பெரும் புண்ணியத்தில் பங்கெடுத்துக் கொள்வார்களாக; முருகவேள் முழுமுதற் கருணை முன்னின்று துணைபுரிக.

7—11—53 சனிக்கிழமை முதல் 12—11—53 வியாழக்கிழமை முடிய
12—11—53 வியாழக்கிழமை ஸ்கந்தஷஷ்டி.

காங்கேயநல்லூர் }
15-8-53 }

திருப்புகழ் சபையார்

குறிப்பு:— இவ்வாண்டு இலக்ஷார்ச்சனையில் பங்கெடுத்துக் கொள்ள விரும்பும் அன்பர்கள் அருச்சனை ஒன்றுக்கு ரூபாய் ஆறு வீதம் செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ள வேண்டுகின்றோம். தபால் மூலம் பணம் அனுப்ப விரும்பும் அன்பர்கள் 'திருப்புகழமிர்தம் ஆபீஸ் 144 சாமிநாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.' என்னும் விலாசத்திற்கு [illegible] 11—53[illegible] சேருமாறு அனுப்பித்தர வேண்டுகின்றோம். சென்னை[illegible] அன்பர்கள் திருப்புகழமிர்தம் காரியாலயத்தில் [illegible] செலுத்தி ரசீது [illegible]ற்றுக்கொள்ளலாம்.

Printed & Published by M. Madhusoodana Sivam at the Thiruppugal Amirtham Press, 144, Swaminaicken Street, Chintadripet, Madras. Editor: Sri KIRUPANANDAVARI.

